# தமிழ்த் தொண்டர்கள்

கருப்பையனார் (அருள்
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்

எம். ரம்போலா மாஸ்கரேனஸ், எம். ஏ.
தமிழ்ப் பேராசிரியர்
செய்ன்ட் ஜோஸப் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.

ஒற்றுமை நிலையம்
8. வியாசராவ் தெரு,
தியாகராயநகர், மதராஸ்-17.

காப்பிரைட்] 1952 [விலை ரூ. 1

# முகவுரை.

மிழ் முன்னேற்றங் கருதி அரும்பாடுபட்டு உழைத்த சான்றோர் அநேகர். உழைக்கின்ற அறிஞரும் மிகப் பலர். அவர்களுள் நம்முடைய தலைமுறையில் மொழி வளர்ச்சியை முன்னிறுத்தி நிலையான பணியாற்றும் உலையாத முயற்சியுடைய ஒரு சில பெரியார்களைப்பற்றி திரு எம். ரம்போலா மாஸ்கரேனஸ் எழுதிய கட்டுரைத் தொகுதியே இப்புத்தகம். இவர்களுள் முழுமையும் எழுத்தின் மூலமாகவே ஊழியஞ் செய்பவர் உளர். எழுத்தாலும் பேச்சாலும் சேவை செய்பவரும் உளர். நெருக்கடியான அரசியல் தொடர்போடு திடமான தொண்டாற்றுபவர் உளர். அத் தொடர்பின்றியே செயலாற்றுபவரும் உளர். தனிப்பட்டவர் எனினும் ஒரு கழகம் இயற்றுவதுபோன்ற பெருஞ் செயல்களைச் செய்பவர் உளர். எக்கழகமும் செய்ய இயலாதவற்றைச் சாதிப்பவரும் உளர் இவர்களும் இவர்கள் போன்ற ஏனைய தொண்டர்களுமே தற்காலத் தமிழ் இலக்கியப் பூங்காவை அமைத்துக் காக்கும் அருங் கலைத் தொண்டர்கள். இவர்களை நாம் நன்றியறிதலோடு பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம். இவர்களுடைய சேவை விளங்க வேண்டும். இவர்களுடைய நூல்களைப் பயிலும் ஆர்வம் அதிகரிக்க வேண்டும். இவ்வழியில் இந்நூல் துணைபுரியும் என்ற துணிபுடையோம்.

உரையாடல் போக்கில் அமைந்த இக்கட்டுரைகள் “தாய் நாடு” சஞ்சிகையில் வெளிவந்தன. இக்கட்டுரைகளையும் பெரும்பாலான உருவப் படங்களையும் உபகரித்த தாய் நாட்டு ஆசிரியரவர்களுக்கும், தெ நொபிலி அச்சக அதிபரவர்களுக்கும், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும் எம் உளமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கின்றோம்.

எம். இ. வீரபாகு,
பதிப்பாசிரியர்.

# தமிழ்த் தொண்டர்கள்.

## டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்.

தமிழ்க் கவலையற்ற தனிப்பட்டவரிடத்தில் முடங்கிக் கிடந்த புராதன இலக்கிய ஏடுகளைத் தேடி எடுத்து பொதுமக்களிடத்து விளங்குதற்குரியனவாக ஆக்கிய வித்தகர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் ஆவர். அவர்களுடைய பெருமுயற்சியால் கறையான்களின் அரிப்பினின்று காக்கப்பெற்ற ஏடுகள் பலப்பல. ஆடிப் பதினெட்டாம் பெருக்கில் காவிரி வெள்ளத்தில் கரைந்து போகவிருந்த அரிய நூல்கள் அநேகவற்றை வாழ வைத்தவர் அவரே. அவர், இருள் கவிந்திருந்த சங்க நூற்குகையில் விளக்கேற்றி வைத்தனர். இருட் குகையை ஒளிக்கோவில் ஆக்கினர்.

ஐயரவர்கள் அசைவிலா ஊக்கமுடையவர். சலியாத உழைப்பினர். வாழ்க்கையில் ஒரு பெரு நோக்கம் கொண்டிருந்தனர். அதனைத் தம் நீண்ட வாழ்வின் முன்னிறுத்தி அயராது பணியாற்றினர். அவர் கூறுகின்றார்: "என்னுடைய வாழ்வின் நோக்கம் எல்லாம் பெரும்பாலும் தமிழ்த் தொடர்பு உடையதுதான். தமிழ் நூல்களை ஆழ்ந்து பயில வேண்டும்........கற்றவரிடத்து ஒழுங்காகப் பாடங் கேட்கவேண்டும். கேட்டவற்றைச் சிந்தித்து முறையாகப் பாடஞ் சொல்லவேண்டும். அதைவிடப் பெரிய உபகாரம் வேறில்லை."

கும்பகோணத்தில், சிதம்பரத்தில், சென்னையில் ஐயரவர்கள் பாடஞ்சொல்லித் தம் வாழ்க்கை நோக்கத்திற்கேற்ற பெரிய உபகாரஞ் செய்தனர். அவர், என்றும் நின்று நிலவுமாறு எண்ணிச் செய்த அரும் பணி மறைந்து தங்கியிருந்த தமிழ் ஏடுகளைத் துருவிக் கண்டு மிகச்சிறந்த முறையில் அவற்றைப் பதிப்பித்ததே. ஏடுகளைத் தேடுவதில் கொண்ட சிரமம்கூட பெரிதல்ல. அவைகளை கணித்தற்கரிய சிரமங் கொண்டு யாவர்க்கும் பயன்படும் முறையில் வெளியிட்டிருக்கிறார்கள். பதிப்புத் துறையில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிலையில் திகழ்கின்றார்கள்.



அவர் பதிப்பித்த நூல்கள் யாவற்றிற்கும் ஒரு தனி அழகு உண்டு, 94-பக்கத்தில் ஒரு சிறு வசன நூல். அதிலும்கூட, நூல் இறுதியில் ஒரு சிறப்புப் பெயர் அகராதி அமைந்திருக்கும். பாடபேதம், பிரதிபேதம், ஒப்புமைப் பகுதி, மூதற் குறிப்பு ஐயரவர்கள் பதிப்பித்துள்ள செய்யுள் நூல்களின் சிறப்பான பகுதிகள். ஆங்கில நூல்களில் அமைந்த இன்டெக்ஸ் (Index) முறை. ஐயரவர்கள் நூல்கள் அனைத்திலுங் காணலாம்.

"தமிழன் என்று சொல்லடா
தலைநிமிர்ந்து நில்லடா"

என்று நம் சமஸ்தான கவிஞர் இராமலிங்கம் பிள்ளை சங்கநாத முழக்கஞ் செய்கிறார்.

"தமிழர் என்றோர் இனமுண்டு
தனியே அதற்கோர் குணமுண்டு"

என்று இப்புலவர் பெருந்தகை இறுமாந்துரைக்கின்றார். அவர் உரைப்பதென்ன? நமது இதய ஒலியை அவர் பிரதிபலிக்கிறார். இந்த நாத முழக்கத்திற்கு, இறுமாப் புரைக்கு, அடிப்படையாக அமைவன இப்போதைக்கு சங்க இலக்கியங்களே. எனவே, அவ்விலக்கியங்களுக்கு வழிகாட்டியாகவும் ஒளி காட்டியாகவும் விளங்கிய ஐயரவர்களே இன்று நம்மிடை நிலவும் பெருமிதமான புத்துணர்ச்சிக்கு உரம் இட்ட உத்தமர்.

ஐயரவர்கள் பத்துப்பாட்டை அச்சிட முனைந்திருந்தார். அப்போது ஒரு கனவான் "இதெல்லாம் யாருக்குப் பிரயோசனம்? ஒருவருக்கும் புரியாத இந்தப் பாட்டு எதற்கு? பாட்டென்றால் எளிதாக இருக்க வேண்டும். ஒரு பாட்டே இவ்வளவு நீளமாக இருக்கிறதே. யார்

படிக்கப் போகிறீர்கள்? நீங்கள் இந்தப் புத்தகத்தை புரோஸாக எழுதிவிடுங்கள், பத்திரிகைகளிற் போட்டு விடலாம். வசன நடையில் இருப்பதுதான் புத்தகம். இதை அச்சிட்டு வீண் கஷ்டப்படவேண்டாம்" என்று நீண்ட யோசனை கூறினராம். இந்த மாதிரி யோசனை சொல்லக்கூடியவர்கள் இன்று தமிழ் நாட்டில் இருக்க மாட்டார்கள். எந்தவிதமான சூழ்நிலையில் பதிப்பு வேலை மேற்கொள்ளப்பட்டது என்பதற்கு மேற்கூறிய சமபவம் ஓர் எடுத்துக்காட்டு.

பாட்டென்றால் பயப்படுபவர்கள்கூட ஐயரவர்கள் தந்துள்ள வசனங்களை பயமின்றிப் படித்துப் பயன் பெறலாம். "நான் கண்டதும் கேட்டதும்" "நினைவு மஞ்சரி" "நல்லுரைக்கோவை" "பழையதும் புதியதும்" என்ற கட்டுரைத் தொகுதிகளில் ஆசிரியர் வாசகரோடு அளவளாவிப் பேசுகின்றார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரமும், என் சரித்திரமும் இத்தகையனவே. ஐயரவர்களுக்கு இயல்பான வடமொழிப் பிரயோகத்தின் மிகுதி, சொல்லப்பட்ட சில சம்பவங்கள் தம்மிலும் விவரிக்கப்படும் தன்மையிலும் கவர்ச்சியின்மை ஆகிய இவை நீங்கலாக நடையில் குற்றமில்லை. நடை, வேண்டுமென்றே எளிதாக்கப் பெற்ற நடை. இவைகளைப் படிக்கும்போது ஆசிரியரின் அருள் உளத்தைப் போற்றாம லிருக்கமுடியாது. விறுவிறுப்பை மட்டும் நாடாது, விஷய ஞானம் பெறவேண்டுமென ஆசிப்பவர்க்கு ஆசிரியரின் வசன நூல்கள் பெருந்துணை செய்யும். உள்ளபடியே, அகராதியை (நிகண்டை) மனனஞ் செய்து வைத்திருந்த பழம் பண்டிதர்களின் அகத்திலே மண்டிக் கிடந்த செந்தமிழை சகலருக்கும் பொதுவான தெளி தமிழ் ஆக்கிய பெருமை ஐயரவர்களையே சாரும்.

# தனித்தமிழ் மறவர்

## மறைமலை அடிகள்.

"தமிழ் தன்னிலே இயங்குவது மட்டுமல்ல தழைத்து வளரும் தன்மையுமுடையது" என்று மொழி நூல் அறிஞர் கால்டுவெல் ஐயர் கூறினார். இதனைத் தம் பேச்சாலும், எழுத்தாலும் நிலை நாட்ட முயன்றவர் உயர்திரு மறைமலை அடிகளாராவர். இவருக்குப் பெற்றோரிட்ட பிள்ளைத் திருநாமம் வேதாசலம். இல்லறத்தவர் எனினும்,அணிந்



காவியாடை அறிவு நாட்டங்கொண்டு கலைத் தவஞானியாக விளங்கினர். இக்காரணத்தால், சுவாமி வேதாசலம் என்னும் பெயர் பொருந்தி நின்றது. இவரது தனித்தமிழ்ப் பற்று அளவிறந்தது. தம் வடமொழிப் பெயரை மறைமலை அடிகள் என்ற தூய தனித்தமிழ்ப் பெயராக்கினர். தனித்தமிழ் மறவராய்த் தழைத்து வாழ்ந்தார்.

1946-ல் கோடைவிடுமுறையில் ஒரு நாள், தேசபக்தர் மாசிலாமணி பிள்ளை யவர்களின் புதல்வர் ஜோசப் ராஜாவும் யானும் சுவாமிகளைப் பேட்டி காணப் போனோம். அப்பொழுது அவர்கள் படித்துக் கொண்

டிருந்தனர். மிக அன்புடன் எங்களுக்கு இருக்கை அளித்தார்கள். அவர்களுடைய முகத்தில் தவழ்ந்த இளநகையும், பேச்சில் தொனித்த இனிமையும் என்றும் மறக்கமுடியாதன. தமக்கு இயல்பான கீச்சுக் குரலில் பேசினார்கள். கிறீஸ்துவர்களின் தமிழ்த்தொண்டைப் பாராட்டினார்கள். பண்டித சவரிராய பிள்ளை அவர்களின், ஆராய்ச்சித் திறனை எடுத்துரைத்தார்கள். அவர்களோடு தாம் கொண்டிருந்த நட்புரிமையைக் கனிவுடன் நினைந்து கூறினார்கள்.

படிப்பகத்திலும், வீட்டிலும் வரிசை வரிசையாக இருந்த நூல்கள் ஆயிரம், ஆயிரம். சமஸ்கிருதம், ஆங்கிலம், தமிழென வகைப்படுத்தி வைத்திருந்த தன்மை ஒழுங்குமுறை ஒரு பொதுநூல் நிலையத்தை நினைவூட்டியது. அங்குள்ள அத்தனை புத்தகங்களும் உறையிடப் பெற்றிருந்தன. பொதுநூல் நிலயத்திலுங்கூட இவ்வளவு ஒழுங்காயும், கருத்தாயும் நூல்கள் பேணப் படுதல் அரிது. மேல்மாடியில் அவர்களது பூசை அறையைக் கண்டோம். அதில் வெள்ளியால் இயன்ற நடராசர் விக்கிரகம் சோபித்து விளங்கியது. சுவாமிகள் பேசிய ஒருமணி நேரமும் தனித் தமிழிலேயே பேசினார்கள்.

"........இத்துணைச் சிறந்ததாகிய இத் தமிழ்மொழி எத்தகைய நுண்ணிய உயர்ந்த ஆழ்ந்த கருத்துக்களையும் தெரிவித்தற்கிசைந்த சொல்வள முடையதாகலின் ஆரியம், ஆங்கிலம் முதலான பிறமொழிச் சொற்களை இதன் கண் புகுத்தாமல் இதனையும் இதன் நூல்களையும் எல்லார்க்கும் தனிமையில் கற்பித்தல் இன்றியமையாததாகும்" என்று ஆசிரியர் மறைமலை அடிகள் "சீர்திருத்தக் குறிப்புகள்" என்பதில் குறிப்பிடுகின்றார்கள்.

அடிகள் கருதியுரைத்த இக்கருத்துரை அவர்கள் நூல்கள் யாவற்றிலும் நிழலிடுகின்றது. அவர்கள் எழுதியது பெரும்பாலும் சித்தாந்தமாதலின், தனித் தமிழ் வகை பெறக் கையாளக்கூடியதாயிற்று. இலக்கிய வரலாற்றுக்கும் சிந்தனைக் கட்டுரைகட்கும், ஆங்கில நூல்களின் மொழிபெயர்ப்புக்கும் அடிகள் கையாண்ட தனித்தமிழ் இசைந்து வருகின்றது. கோகிலாம்பாள் கடிதங்கள் என்ற கதை நூலிலும் தனித்தமிழே முழங்குகின்றது. இந்நூல் அடிகளின் தனித் தமிழ் பெரும்பற்றிற்குத் தனியானதொரு எடுத்துக்காட்டாக இருக்கிறதே யொழிய, பிறகதை நூல்களைப்போல பொது மக்களால் விரும்பிப் படிக்கப் பெறுமாறில்லை.

தமிழ் நாட்டிலே தனித்தமிழ் இயக்கங்கண்ட பெருமைக்குரியவர் அடிகளே. இவர்களைப் பின்பற்றிய வழியில், திரு. வி. க. எழுத்திலும் பேச்சிலும் சிறப்பாக செய்தித்தாளிலும் அரசியல் மேடையிலும் தனித் தமிழார்வங் காட்டுகின்றனர். பாலசுந்தரன் இளவழகன் ஆனார் அவர் தம் இலக்கிய நடை தனித்தமிழ் நடை ஆயிற்று. சந்தோஷம் மகிழ்நன் ஆனார். அவரும் ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தனித்தமிழில் யாத்தனர். அடிகள் தோற்றுவித்த இயக்கத்தின் மற்றொரு முன்னணி வீரர், திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம்

மறைமலை அடிகள் பிறர் துணை நாடாத பெரு வீரர் எவர் எதிர்ப்பையும் பொருட்படுத்தாத பேராண்மையுடைவர். கல்லூரியில் பத்துப் பாட்டு, முதலிய தொகை நூல்களுக்குப் பொருளுரைக்குங் காலத்து, பழைய உரையாசிரியர்கள் இழுத்த இழுப்பில் செல்லவில்லை தம் நுண்ணறிவிற்கேற்ற புத்துரை கூறினர். அவை பட்டினப்பாலை ஆராய்ச்சியாகவும்,

முல்லைப்பாட்டு ஆராய்ச்சியாகவும் முகிழ்த்தன. கட்டுரையாளர் துணை நாடாது ஞான சாகரம் என்ற சஞ்சிகையைத் திறம்பட நடத்தினர் தமிழ்நாட்டிலும் வடநாட்டிலும் இலங்கையிலும் பல விடங்களில் அரிய சொற்பொழிவாற்றிப் பெரும் பொருளீட்டினர்.

“மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி?” என்ற நூலை இயற்றிய அடிகள் தம் 75 ம் ஆண்டில் இன்னுயிர் நீத்தார். இறந்தும் இறவாத புகழுடையவராக இலக்கிய உலகில் அவர் ஒரு மலைபோல நிலைபெற்றிருக்கின்றார்.

---

## தமிழ்த் தென்றல்

### திரு. வி. க.

ஏழு ஆண்டுகளுக்கு முன்பு திருச்சிராப்பள்ளி செயிண்ட் ஜோசப் கல்லூரித் தமிழ்ப் பேரவையில் சொற்பொழிவாற்ற திரு. வி. க வந்திருந்தார்கள். சினிமாவில் நடிகர்களின் முகவெட்டைப்பற்றிப் பேசிக்கொள்கிறார்கள் அல்லவா? எதைக் கொண்டு அதனை நிர்ணயிக்கிறார்களோ? அது டயரக்டர்களுக்கே வெளிச்சம். திரு. வி க. வின் முகவெட்டு ஒரு தத்துவ அறிஞரின் முகவெட்டு. நீண்ட கூர்மூக்கு. கண்ணாடிச் சில்லை ஊடுரு



விப்பாயும் ஒளி படைத்த கண்கள். சுருக்கம் விழுந்த பரந்த நெற்றி. வழுக்கைத் தலையின் நடு நாயகமான உச்சிக்குடுமி ஆடம்பரமற்ற வெண்ணுடை அவர் தன்னந்தனியாக வந்திருந்தார். ஆசிரியர்கள் அறையில் அமர்ந்தார். அன்றுதான் அவரை முதல் முறையாகக் கண்டேன். அவரோடு உரையாடும் பேறு பெற்றேன்.

திரு. வி. க. வின் சேவை பல திறப்பட்டது. விசித்திரமானதுங்கூட. பொது வாழ்வினை 15-ஆண்டுகள் ஆசிரியப் பணியோடு தொடங்கினார். போதகாசிரியர் பத்திரிகாசிரியரானார் தேச பக்தன் ஆசிரிய பீடத்தமர்ந்தவர் 1920 ல் அதனின்றும் விலகினார். அதே ஆண்டில் 'நவசக்தி''யை ஆரம்பித்தார் 13 - ஆண்டுகள் அதனை நடத்தினார். தொழிலாளர் இயக்கங்கண்டார். ஹோம் ரூல் கிளர்ச்சியில் அன்னிபெசன்ட் அம்மையாரின் அமைச்சராக இயங்கினார். காங்கிரஸில் தீவிரமாக உழைத்தார். 1926-ல் அதிலிருந்து விலகினார். "கால தேவதை'' அவருக்கு அவ்வப்போது அறிவுறுத்துகின்றபடி "அவருக்கினிய தேசத்தொண்''டினைத் தொடர்ந்து செய்து வருகின்றார்.

தமிழ்ப் புலவர் மணியாகிய அன்னார் தம்மைப் பத்திரிகை உலகிற்கும் தொழிலாளர் உலகிற்கும் அரசியல் உலகிற்கும் அர்ப்பணித்தார். அதன் காரணமாக இந்நாட்டுப் பத்திரிகை இனம், தொழிலாளர் கூட்டம், அரசியல் வட்டாரம் நல்ல தமிழ் வளம் பெற்றது. அயல்மொழிப் புயலும் மணிப்பிரவாள சண்டமாருதமும் சுழன்ற மேற்படி இடங்களிலெல்லாம் திரு. வி. க. தமிழ்த் தென்றல் உலவியது. தமிழ் உள்ளங் குளிர்ந்

தது 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்பது அவர்கொண்ட கொள்கை. இந்த இலட்சியம் அவரை எத்தனை எத்தனை துறையில் பணி செய்யத் தூண்டியுள்ளது? அவர் தமிழாசிரியர், சமூக சீர்திருத்தவாதி; தொழிலாளர் தொண்டர்; அரசியல் தலைவர்; எழுத்தாளர் என்ற தன்மையில் பாவலர், பத்திராசிரியர், பதிப்பாசிரியர், உரை ஆசிரியர், உரைநடை வள்ளல், பேச்சில் பெரு நாவலர், கலை ரசிகர் கூட்டத்தில் புலவரும் வியக்கப் பேசுகிறார். பாமரர் கூட்டத்தில் யாவரும் விரும்பப் பேசுகிறார். தொழிலாளர் கூட்டத்திலும் அவருடைய இலக்கியத் தொனியை இறக்குவதில்லை. அவர் அவையை அறிந்துகொள்ளாமலில்லை. அவையினர் அவரை நன்றாக அறிந்திருக்கிறார்கள் என்பதனால் அவருடைய பேச்சுக்கு ஒரு கவர்ச்சி அமைந்திருக்கிறது அவருடைய பேச்சை சுருக்கெழுத்தெடுத்தால், எடுத்தபடியே அச்சுக்கு அனுப்பலாம் அவர் எழுதுவது போலவே பேசுகிறார்.

சுந்தரனார் தந்துள்ள செந்தமிழ்க் கருவூலங்களாகிய "இமயமலை அல்லது தியானம்" "சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து" "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற நூல்கள் இளம் உள்ளங்களைச் சிந்திக்கத் தூண்டிச் செயல்வழி காட்டுவன. பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் என்பன வாழ்க்கை வழி நூற்கள். தமிழ்ச்சோலையில் நவ சக்தியின் தலையங்கங்கள் நிலைபெற்றுள்ளன, தேசபக்தன் தலையங்கங்களை "தேசபக்தாமிர்தம்" என்ற நூலாக வெளியிட்டுள்ளதாக ஆசிரியர் உரைக்கின்றார். அந்த நூல் பெயருக்கேற்றபடி மறைந்திருக்கிறது. தமிழ்த்தென்றல் அவருடைய தலைமை உரைகளைக்

கொண்டது. திரு. வி. க. வின் பதிப்பு நூல்கள், உரை நூல்கள் நீங்கலாக அவர் தம் சொந்த உரையும் பாட்டு மான நூல்கள் 30.

அவருடைய எழுத்திலும் பேச்சிலும், ஆண்டவனை வேண்டாத காரல்மார்க்ஸ் தத்துவத்திற்கும், கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என்று கூறும் வள்ளுவர் தத்துவத்திற்கும் பாலம் அமைக்கும் முயற்சி இருக்கும். சைவத் திறவுகோல் கொண்டு, சமரச சன்மார்க்கக் கதம் பக் காட்சியைத் திறக்க முற்படும் திறம் காண்போம். துறவினைப்பற்றிய வெறுப்புரை தவிர அவர் தம் உரை யில் அன்பும் மெல்லியல்பும் இழைந்து வரும். இத் தமிழ்த் தென்றலிடையே புயலாகக் குமுறுவது பொது வுடைமை முழக்கம்.

'உள்ளொளி' நல்கிய திரு. வி. க. இன்று கண் ணொளி மங்கியிருக்கிறார்கள். இது நமது தவக்குறை இந்நிலையிலும் ஆசிரியரின் தமிழ் ஆர்வம் மங்கவில்லை. "அருகன் அருகே அல்லது விடுதலை வழி" என்ற தம் கவிதா நூலின் அரங்கேற்றத்தில், கண் பார்வை குறை பட்டதால் வெளி உலகில் செல்லாது மனதைக் கட்டுப் படுத்தி நல்ல நிலையில் நூல்கள் இயற்ற முடிகிறதென் றும், தம் கருத்தைச் சொல்லி நண்பர்கள் மூலம் இன் னும் பல நூல்கள் இயற்ற உத்தேசித்திருப்பதாகவும் கூறியிருக்கிறார்கள்.

# முற்றிப் பழுத்த மொழி நிபுணர்
## சுவாமி ஞானப்பிரகாசர்.

ஞானப்பிரகாசர் தம் பள்ளிப் பருவத்தில் நடை பெற்ற ஒரு சம்பவம் பற்றி எழுதுகிருர்: "எடுத்த



வுடனே பாட்டு இயற்றுகிற வழக்கம் நிங்குள்ளது என் றதை ஒருநாள் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயரும் நன்

ருய்க் கையிலும் மனதிலும் பதிய எனக்குப் படிப்பித்தார். தற்காலம் வட்டுக்கோட்டையில் கல்லூரியில் உப தலைவரா யிருக்கின்றவர் மானிப்பாயில் என்னோடுகூட ஒரு வகுப்பில் படித்தவர். இவரும் நானும் சில நாள் சிநேகிதராய் இருந்தோம். பின் 'கடுஞ் சிநேகம் பகை காட்ட' அவர் என்னைப் பேசிப்போட்டார் நான் வகுப்பிலிருந்துகொண்டுதானே அவரது செயலைக் கண்டித்து, ஒரு பாட்டெழுதி நீட்டினேன் அவர் கோபித்துக்கொண்டு எங்களைப் படிப்பித்துக் கொண்டிருந்த மாரிமுத்து உபாத்தியாயரிடம் அதைக் கொடுக்க அவர் 'வகுப்பு நேரம் செய்கிற வேலை இதுதானோ' என்று மிகச் சினந்து கையை நீட்டச் சொல்லிப் பிரம்பினால் ஒரு அடி தந்தார். அவ்வடி எனது விசித்திர வேலைப்பாடுள்ள மோதிரம் தெறித்துப்போகச் செய்து விட்டது.''

இந்த அடிக்குப்பிறகு சுவாமிகள், கவிதை எழுதுவதை அடியோடு விட்டிருக்கவேண்டும். அது ஒரு வகையில் நன்மையாகவே முடிந்தது. கவிதைக் கனவுலகில் உயரப் பறப்பதை விட்டு ஆராய்ச்சித் துறையில் அடித்தளஞ் சென்று ஆக்கவேலை செய்ய அன்று ஆசிரியர் அடித்த அடியல்லவா அடி எடுத்துக் கொடுத்திருக்

சுவாமிகள் தம் இளமைப் பருவத்தின் ஒரு சில சம்பவங்களையே குறிப்பிடுகின்றார். ருசிகரமான சம்பவங்கள்; நகைச்சுவை கலந்து வர்ணிக்கிறார். அவற்றைப் படிக்கும்போது ஒரு ஏக்கம் தோன்றும். அவர் தம் சரிதையை ஏனோ விரிவாக எழுதவில்லை என்ற ஏக்கம். தமிழ்த் தாத்தா சுவாமிநாத ஐயரைப்போல

நாற்கலைப் புலவர் ஒரு சுயசரிதை வழங்கவில்லையே என்ற வருத்தம்.

43 ஆண்டுகளாக, யாழ்ப்பாணத்து நல்லூரிலே குருத்துவத் திருத்தொண்டு செய்தனர் அதனால் நல்லூர் ஞானப்பிரகாசர் என்று அறியப்பட்டார். ஏழை எளியவரிடையே வாழ்ந்தார் முக்கியமாக அவருடைய முன் மா தி ரி கை யால் 5000 மேற்பட்டவர்களைத் திருமறையில் சேர்த்தனர் கோவில்களைக் கட்டினார். தம் ஞானப்பிள்ளைகளுக்கு உடை யுணவுத் தேவைகளை அளித்தார். கல்வி அறிவூட்டினார். அவர்களை வேத நெறியில் வளர்த்தார். திறமையான வேத போதகர் என மதிக்கப் பெற்றார்.

தேவ ஊழியர் ஞானப்பிரகாசர் மாபெரும் எழுத்தாளர், சரித்திராசிரியர்; பன்மொழிப் புலவர்; முற்றிப் பழுத்த மொழி நிபுணர், சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இத்தலி பிரஞ்சு முதலிய 18 மொழிகளை எழுதவும் பேசவும் ஆற்றல் பெற்றிருந்தார். சம்ஸ்கிருத மூலம் பிற ஆரிய மொழிகளை அறிமுகமாக்கிக்கொண்டார். சிங்களத்தின் வழி பாலிய மொழியையும், திபெத் பர்மிய கூர்க்க மொழிகளையும் தெரிந்தனர். அவர் அறிந்த பிற மொழிகள் இலத்தீன், கிரேக்கம், போர்த்துக்கீஸ், டச்சு, ஜெர்மன். மொத்தத்தில் 70 மொழிகளை அறிந்திருந்தார் என்பர்.

அவர் ஒரு முறை ஜெர்மனிக்கு விஜயஞ் செய்தார். அப்போது அரசாங்கத்தார் அ வ ர து வரவின் ஞாபகார்த்தமாக அவரது படிவம் தாங்கிய தபால் முத்திரை வெளியிட்டுப் பெருமைப் படுத்தினார்கள். இலங்கை அரசியலாரும் அவரை நன்கு கௌரவித்தார்கள். சரித்

திரக் கையெழுத்துப் பிரதிகள் குழுவில் அவரை அங்கத்தினராக இலங்கை அரசாங்கம் நியமித்தது.

மொழி ஆக்கத் துறையில் அவரது தனிப் பெரும் சாதனை அவர் அமைத்துத் தந்த சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி. சுவாமிகளுக்கு முன்பு அத்துறையில் நாட்டஞ் செலுத்தியவர் மிகச் சிலர். தமிழ் லெக்ஸிகன் சென்னை பல்கலைக் கழக அதிகாரத்துடன் வெளியிடப் பட்டது. அதிலுங் கூட சொற்பிறப்பு காட்டப்பட வில்லை அதனைத் தொகுத்த அறிஞர்கள் 'மொழிப் பொருள் காரணம் விழிப்பத் தோன்று' என்ற தொல் காப்பிய சூத்திரத்தைத் தமக்கு ஆதாரமாகக் காட்டியும் தமிழ் மொழி நூல் குழந்தைப பருவத்திலேயே இருக் கிறதென்பதாகக் காட்டியும் சொற்களுக்குக் காரணங் காட்டுறார்இல்லை. பேச்சுவழக்கில் உள்ள சொற்களை எல்லாம் சேர்த்ததில் குறைவில்லை. அதற்காகப் பொருந் தாப் பொருள் உரைக்கவேண்டுமோ? தமிழர் என்ற சொல்லுக்குப் பொருள் தரும் முறையைப் பாருங்கள் "தமிழர் n<E tumbler, drinking Cup, விளிம்பில் லாத பாத்திரம்" எப்படி இருக்கிறது பொருள்? பாத் திரத்தைக் குறிக்கப்பேச்சு வழக்கில் டம்ளர் தம்ளர் என்கிறோம். என்றாலுந்தான் என்ன? இதற்காகவா உணர்வு நிறைந்த நல்ல தமிழரை விளிம்பில்லாத தீர்த்த பாத்திரம் ஆக்கவேண்டும்! இந்த அகராதிக்கு 4,10,000 ரூபாய் செலவு! 27 ஆண்டு பெரும் உழைப்பு!

ஒரு பல்கலைக் கழகம் மேற் கொள்ளவேண்டிய பெரும் பொறுப்பு வாய்ந்த பணியை, ஒரு ஸ்தாபனம் செய்யவேண்டிய அருந் தொண்டை சுவாமி ஞானப் பிரகாசர் தனி நின்று ஆற்றியிருக்கிறார்கள். சொற்

பிறப்பு ஒப்பியல் அகராதியின் முதல் மடலின் ஆறு பகுதிகளும் அச்சிடப்பெற்றுள்ளன. இந்த அகராதியைத் தம் வாழ்நாளிலேயே முற்ற முடித்தனர் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. திராவிட மொழிகளிலுள்ள வேர்ச் சொற்கள் வெற்றொலிகள் அல்ல, அவை அனைத்தும் பொருள் பொதிந்த மெய்ம் மொழிகள் என்பதை நிறுவுகின்றார். தமிழ்ச் சொற்களுக்கு மிக எளிதாக சமஸ்கிருத வேர்ச் சொற்களை மூலமாகக் காட்டுவது ஒரு சம்பிரதாயம். இதையொட்டியே உலகம், கலை, நகுலம் போன்ற பல சொற்களுக்கு சமஸ்கிருதத் தாது காட்டப் பெற்றன. சுவாமிகள் இச்சொற்களுக்கெல்லாம் தமிழ் வேர்ச் சொற்களை ஆராய்ந்து காட்டுகின்றார்.

யோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள் கூறுவது போல, நல்லுணர்ச்சியுள்ள தமிழ்ப் பெரு மக்கள் இச் சொல் வல்லவனை நினைந்து தமிழ்ப்பணி புரியவேண்டும்.

"தமிழே உலகத் தாய் மொழி என்று
பறையடித்தோதிய பன்மொழிப் புலவன்
சொல்லா ராய்ச்சியும் தொல்லா ராய்ச்சியும்
வல்லவன் பைபிள் வழியே நடப்போன்
மலையுப தேசமே கலையெனக் கொண்ட
ஞானப் பிரகாச நாவலன் இலங்கை
என்றும் போற்றும் எழிலார் வித்தகச்
செல்வனைத் தமிழர் சிந்தித் துநிதம்
புரிக தமிழ்ப்பணி எந்தாய் வாழ்க"

# தமிழ்த் தவஞானி

## சுத்தானந்த பாரதியார்.

சில ஆண்டுகளுக்கு முன்பு புதுச்சேரியில் வீரமா



முனிவர் விழா கொண்டாடப்பெற்றது. அவ்விழாவை நடத்திய அன்பர்கள் சுவாமி சுத்தானந்த பாரதியாருக்கு அழைப்பு அனுப்பி அவரது ஆசிச் செய்தி வேண்டி எழுதினார்கள். அவர் வீரமா முனிவர் பெருமை என்ற தலைப்பில் ஒரு கட்டுரையே எழுதி அனுப்பி யிருந்தார். அக்கட்டுரை சபையில் படிக்கப் பெற்றது. சுத்தானந்தர் வீரமா முனிவரை அறிந்து பாராட்டிய முறை யாவர்க்கும் பெருதருவதாயிற்று. அப்போது அங்குண்டான உற்சாகத்திற்கு அளவேயில்லை. கலைத்துறையில் சுத்தானந்த பார

தியாரின் பரந்த பொதுநோக்கு மிகமிக வரவேற்கத் தக்கது. அது அவரது இலக்கியப் பணியில் குறிப்பிடத் தகுந்த பண்புங்கூட.

தமிழ் இலக்கியம் ஒரு இனத்தவரின் ஏகபோக உரிமை, தமிழ் வளர்ச்சி ஒரு குறித்த கோஷ்டியினரின் பரம்பரைப் பாத்யதை என்ற குறுகிய எண்ணத்தை வெளியிற் சொல்லாமல் வினை அளவில் வேண்டுவன செய்கின்றவர்கள் சுவாமிகள் கூறுவதைக் கவனிப்பார் களா? அவர் கூறுகின்ருர்: "கலைக் கோயில் பொதுக் கோயில். சாதி மத வேறுபாடே அதில் இல்லை. உலக ஒற்றுமைக்குக் கலைப் பண்பு பெரிய சாதனமாகும். தமிழ்க் கலைக் கோயிலில் மேற்கும் கிழக்கும் இணைந்து விளங்குகின்றது சைவர் வைணவர் சமணர் பௌத்தர் இஸ்லாமியர் கிறிஸ்துவர் அனைவரும் அக்கோயிலில் அன்புத்தொண்டு செய்திருக்கிருர்கள். அறிவு விளக்கேற்றி வைத்திருக்கிருர்கள். ஆர்வ மாலை சூட்டி அணி செய்தி ருக்கிருர்கள்." சுவாமிகளின் உள்ளம்போல விரிந்த இவ்வரிய பொது நோக்கு நமது பண்ணைகளுக்கும் கழ கங்களுக்கும் வெளியீட்டகங்களுக்கும் என்றுதான் ஏற் படுமோ அறியோம் பராபரமே!

இராமச்சந்திரபுரம் அன்பு நிலைய வெளியீடுகளின் பட்டியலை ஒருமுறை படித்தாலே போதும். சுத்தானந்த ரின் சலியா உழைப்பின் பெருமை புலனுகும். முத்தமிழ் வித்தகக் குன்று சுத்தானந்தர். சுத்தானந்தச் சுனையிலி ருந்து கவிதை, வசனம், இசை, நாடகம், சிறுகதை வர லாறு முதலியன பெருக்கெடுத்துக் கொண்டேயிருக் கின்றன. அன்பிற்கு அயர்ச்சியில்லை. வற்றுதலும்

இல்லை. சுவாமிகள் வற்ருத தமிழ் ஊற்ருக விளங்கித் தமிழ்ப் பயிர் வளர்க்கின்ருர்.

ஆங்கிலம் பிரஞ்சு ஆரியம் ஹிந்தி முதலிய பிற மொழிகளிலும் பாண்டித்யமுடைய சுத்தானந்தர் நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியை வளர்க்கக் கங்கணம் கட்டி உழைக்கின்ருர். உறங்கும் தமிழ் இனத்தைத் தட்டி எழுப்பிச் சேவைக்கு அழைக்கின்ருர்.

"முன்னை மொழிக்கெல்லாம்
முன்மொழியை முத்தமிழை
பொன்னைப்போல் போற்றி
புதுநயங்கள் ஏற்றிடுவோம்
அன்னிய மாயத்
தழுந்திக் கிடக்காதே
சொன்னச் சுரங்கம்
சுரந்திருக்க உன்மனையில்
இன்னெருவர் வீட்டில்
இரந்துண்ணப் போவாயோ?
என்னே உன் ஏழைமைதான்
எம்மொழிக்கும் தாரகமாய்
அன்னைமொழி யோங்க
அருட்பணிசெய் எம்பாவாய்"

என்று உணர்ச்சிப் பெருக்கோடு தமிழ்த் திருப்பாவைப் பாடுகின்ருர்.

"எளிய பதங்கள் எளிய நடை எளிதில் அறிந்துக் கொள்ளக்கூடிய சந்தம் பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய் மொழிக்குப் புதிய

உயிர் தருவோனாகின்றான்'' என்று உரைத்த மகா கவி சுப்பிரமணிய பாரதியார் தமது தீந்தமிழ்ப் பாட்டால் இலக்கிய உலகில் ஒரு புதிய பாதை வகுத்தார். அவரைப் பின்பற்றித் தமிழுக்குப் புதிய உயிர் ஊட்டுபவர் சுத்தானந்தர். அவரது கவிதையில் மகா கவி குறித்த சிறப்பியல்புகளைக் காணலாம். பன்னிப் பன்னி ஆதாரங் காட்டி அளக்காமல், இதயந் திறந்து வாய்விட்டு அளவளாவுதல் அவர் செய்யுள் திறன். கேட்போம் அவரை.

“தலை நிமிர் தமிழா—பெற்ற
தாயின் மனங்குளிர
மலை குலைந்தாலும்—தமிழா
மனங் குலையாதே
தமிழ்க்கனல் வளர்ப்போம்—எங்கும்
தமிழிசை யொலிப்போம்
தமிழகத்தினிலே—உலகின்
தாயகம் சமைப்போம்
ஞானச் சிங்காதனத்தில் அன்னை
நன்று விளங்குகவே
வானச் சுடரணிகள்—மணி
மகுடஞ் சூட்டுகவே”

கவிதையைக் காட்டிலும் உரைநடைத் துறையில் அவரது சேவை மிகுதியாகப் போற்றத்தக்கது. திருவாரூர்த்தேரைப்போல நிதானமாக ஊர்ந்து வரும் தமிழ் வசனம் சுத்தானந்தர் கைவரிசையால் மின்னல் வேகம் பெற்றது. சுப்பிரமணிய பாரதியார் தோற்றுவித்த எளிய நடை இயக்கத்தின் முன்னணித் தொண்டர் சுத்தானந்தர். பொது ஜனங்களுக்குப் பளிச்சென்று புரியும் பேச்சுத் தமிழில் அவர் எழுதுகின்றார். அவரது நடையில் எளிமையும் இனிமையும் இழைந்து வருகின்

றன. செறிவும் மிடுக்கும் சேர்ந்து வருகின்றன. இதய ஆழத்திலிருந்து சொற்கள் இலாவகமாக எழுந்து நடன மிடுகின்றன. பிறமொழிப் புலமை உரம் ஊட்டுகின்றது. சிறு சிறு வசனங்கள். அவற்றை இன்னமும் குறுகத் தறிக்க அரைப் புள்ளி கால் புள்ளி பிரயோகம். இவை தமிழ் வசன வளர்ச்சிக்கு சுத்தானந்தர் வழங்கும் பிர சாதங்கள். இன்று ஸயன்ஸ் ஆனாலும் பொருளாதார மானாலும் எதுவானாலும் தமிழில் எழுதலாம் என்ற நம் பிக்கை ஏற்பட்டிருக்கிறது. இதற்குரிய துறையில் ஆக்க வேலைக்கு அடிகோலியவர் சுத்தானந்த அடிகளார்.

## மகிபாலன்பட்டி முதுபெரும் புலவர்

### பண்டிதமணி கதிரேசன் செட்டியார்.

கண்டது கற்கப் பண்டிதன் ஆவான் என்பது பழ மொழி. கதிரேசச் செட்டியார் கண்டது கற்கவில்லை. அதனால் தான் அவர்கள் பண்டிதர் என்பதற்கு மேல் பண்டித மணி ஆனார்கள். எப்படி என்று கேட்கிறீர்களா? அவருக்குக் கற்பன கற்கவேண்டு மென்ற பெரும் ஆசை; கற்றுக்கொடுக்க வல்லவர் அக் கிராமத்தில் (மகிபாலன்பட்டி)யாரு மில்லை. "நான் இருக்கு றேன் மனனம் செய்து சொல்கிறேன். சொல்வது சரியா என்று



புத்தகத்தை வைத்துக் கவனியுங்கள்'' என ஒருவரை வேண்டினார். அவரும் இசைந்தார்; ஆனால் ஒரு நிபந்தனையோடுதான். "ஒவ்வொரு பிழைக்கும் என் கையால் குட்டுப்பட வேண்டும். சம்மதமா?" என்றார். சம்மதம் தெரிவித்தானதும் பாடந் தொடங்கிற்று. "அகர முதல எழுத்தெல்லாம்'' என்றார் கதிரேசச் செட்டியார். "நிறுத்து, நிறுத்து; எடுத்ததுமே பிழை; வாங்கு குட்டை'' என்றார் சரிபார்க்க வாய்த்த பெரியார். கதிரேசனாருக்கு ஒன்றும் புலனாகவில்லை "புத்தகத்தில் அகர முதல வெழுத்தெல்லாம் என்றிருக்க நீ அகர முதல எழுத்தெல்லாம் என்றது பிழை'' என்று இடஞ் சுட்டிக் காட்டி "எங்கே குட்டு'' என்று ஒருபோடு போட்டார் பெரியவர்.

கதிரேசனார் அந்தப் பேர்வழியின் உதவியைத் தொடர்ந்து தேடினாரோ என்னவோ தெரியாது. இச் சம்பவத்தை பண்டித மணியே வேடிக்கையாகச் சொன்னாலும் கேட்பதற்கு உருக்கமாக இருக்கும். இதைவிட உருக்கமானது இப்படித் துன்பப்பட்டும் ஆர்வங் குன்றாது கட்டுப்பாடான உறுதி நெகிழாது தாமாகவே நூல்களைக் கற்று மேதையான அதிசய சம்பவமே. அவர் பள்ளிக்கூடத்திலும் பயிற்சி பெறவில்லை பல்கலைக் கழகத்தையும் பார்க்கவில்லை. தமது கூர்த்த மதியின் துணைகொண்டு தொன்னூல்களைத் துருவித் துருவிக் கற்றார். நூல்களில் காணாதனவும் நுணுகி அறிந்தார். அவரே சொல்வார் ஆசிரியரது கருத்துக்களை எதிர்த்து மறித்துக் காணவேண்டுமென்று. அம் முறையில் அவர் இலக்கிய இலக்கணங்களில் எதிர் நீந்திக் கரைகண்டவர். அவர் பாடஞ் சொல்லுங் காலத்

தும் சொற்பொழிவாற்றுங் காலத்தும் இந்தப் பண்பு பாங்குற ஒளிரும்.

பண்டித மணி தமிழ்த் துறையில் செய்துவரும் சேவைகள் பலசிறந்தன. அவர் சமஸ்கிருதத்திலும் புலவர் ஆதலின் அம்மொழிக்கண் அமைந்த சுக்கிர நீதி மிருச்சகடிகம் உதயணன் சரிதம் சுலோசனை முதலிய நூல்களைத் தமிழாக்கி உதவியிருக்கின்றார் இப்புத்தகங்கள் வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிப் புலவர்களாலும் பெரிதும் பாராட்டப்பெறுகின்றன. அவர் ஆங்காங்கே சென்று நிகழ்த்திய பிரசங்கங்கள் மகாநாட்டுத் தலைமை உரைகள் வானொலிப் பேச்சுக்கள் சஞ்சிகைக்கு வழங்கிய கட்டுரைகள் உரை நடைக்கோவை என்ற பெயரில் நூல்வடிவில் வெளிவந்துள்ளன பண்டித மணியவர்களின் எழுத்துப் பணியில் தலைசிறந்தது திருவாசகத்திற்கு அவர்கள் எழுதி வருகின்ற கதிர் மணி விளக்கம் ஆகும்.

திருச்சிராப்பள்ளியில் தமிழ்ப் புரவலராகச் சிறந்தோங்கிய பட்டாபிராம பிள்ளை மகா வித்வான் தியாகராஜ செட்டியாரைக் கண்ட நேரமெல்லாம் திருவாசகத்திற்கு உரை எழுதவேண்டுமென்று அவரை நச்சரித்துக்கொண்டுவந்தார். ஒருநாள் மகாவித்வான் திருவானைக்காவுக்குப் போய்க்கொண்டிருந்தார். பட்டாபிராம பிள்ளை திருவரங்கத்திலிருந்து வந்துகொண்டிருந்தார். செட்டியாரைக் காவிரிப் பாலத்தில் சந்தித்தார் பார்த்ததும் திருவாசகவுரையைப்பற்றி நினைப்பூட்டி "எவ்வளவு ஆகியிருக்கிறது?" என்று ஆர்வத்தோடு கேட்டார். செட்டியாருக்குச் சினம் பொங்கியது. "இதோ

பாருங்கள், இன்னொரு முறை இப்படிக் கேட்டால் காவிரியில் விழுந்து என் பிராணனைப் போக்கிக்கொள்வேன். திருவாசகம் எங்கே? நான் எங்கே? அதற்கு உரை எழுத வேண்டுமென்றால் எவ்வளவோ படித்திருக்கவேண்டும். எத்துணையோ ஆற்றல் வேண்டும். விஷயம் தெரியாமல் எழுது எழுது என்று வற்புறுத்துகிறீர்களே" என்று சரமாரியாய்ப் பொழிந்தார் பட்டாபிராம பிள்ளை பயந்துபோனார். மீண்டும் உரையைப்பற்றி ஏன் பேசுகிறார்? "திருவாசகம் எங்கே? நான் எங்கே?" என்பது தியாகராஜ செட்டியாரையொத்த பெரும் புலவர்களில் அவையடக்கப் பல்லவி என்று நினைத்தற்கில்லை. உள்ளபடியே அச்சத்தால் எழுந்த பேச்சு என்றே கொள்ளவேண்டும் கவிதைக் கனிவிற்கேற்ற உள்ளக் கனிவை அவர்கள் எதிர்நோக்கியிருந்தார்கள்போலும். திருவாசகத்திறகு மரபு வழாது நுண் பொருள் கூறுவதில் பண்பட்ட பண்டித மணியவர்கள் தற்போது அதற்கு விளக்கவுரை எழுதும் பணியில் ஈடுபட்டிருப்பது காலங் கருதி இடத்தாற் செய்யும் கனிந்த செயலாகும்.

பண்டித மணிக்கு பிரயாணத்திற்கேற்ற உடல் நிலை போதாது. என்றாலும் தமிழ் அன்பர்கள அழைக்கும் இடமெல்லாம் போந்து விண்மாரி போன்ற சொன் மாரி பெய்து வருகிறார்கள். பல் போனால் சொல் போச்சு என்பது இவர்கள்பால் பொய்த்துப் போயது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியராகவும் பற்பல தமிழ்ச் செயற் குழுக்களின் தலைவராகவும், தொண்டாற்றிய பண்டிதமணி இப்போது மகிபாலன் பட்டியில் அமைதியான சுற்றுச் சார்பில் திருவாசகத்திற்கு உரை எழுதி வருகின்றார்கள். வயதுடன் வளரும்

புகழை வளர்க்கும் புலமை நயம் படைத்த பண்டித மணி,

“மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை”

என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கியமாக இலங்குகின்றார்கள்.

---

## சிறுகதை ஆசிரியர்
### “புதுமைப் பித்தன்”

இலக்கிய வகைகளுள் இன்று சிறுகதைக்கே மக்கள் வயப்பட்டு நிற்கின்றனர். பலநாட்டவரும் எழுதிய சிறு கதைகளிலிருந்து உலகச் சிறு கதை தொகுதிகள் உருவாகி வருகின்றன. பெருவிருப்போடு பலராலும் படிக்கப் பெறுகின்றன. சிறுகதையாய இலக்கிய வகைகளுள் ஒன்றாக அறிஞர் உலகம் ஏற்றுக் கொண்டது; அதுவும் ஆற்றல்



மிக்க ஒன்ருக அமைந்துவிட்டது. நம் தாய்நாடு மட்டும் இதற்கு விதிவிலக்கா என்ன ?

நம் நாட்டில் சிறுகதை எழுத்தாளர்களில் முன்னணியில் வைத்து எண்ணத்தக்கவர் புதுமைப்பித்தன். சொ விருத்தாசலம் பிள்ளை என்ற அவரது இயற்பெயர் பலருக்குத் தெரியாது அவரை நேரில் பார்த்தவர்கள் புதுமைப்பித்தனென்று ஒப்புக்கொள்ள மாட்டார்கள் அவ்வளவு பழமைக் கோலத்தோடு அவர் காட்சியளிப்பார். புதுமைப் பித்தன் பிறவி எழுத்தாளர்; சிந்தனைச் சிற்பி; சொல்வண்ணங் கொண்டு கை வண்ணங் காட்டி கருத்தோவியம் தீட்டும் கலைப்பித்தன். சிறந்த சிறுகதை எழுத்தாளருக்கு இரண்டு பண்புகள் இன்றியமையாதன என்பர். அவையாவன; தீவிர சிந்தனை, சீர்தூக்கிப் பார்த்து மார்க் கொடுக்கும் பண்பு. இவ்விரண்டும் இவரிடத்து நிறைந்து ததும்பின.

இவரே கூறுவதுபோல சில கதாசிரியர்கள் தொடங்கிவிடுவார்கள் "நாராயணன் ஜன்னல் வழியாய் பார்த்துக் கொண்டிருந்தான்" என்று அப்புறம்? அப்புறம் ? மணிக்கணக்காகப் பார்த்துக்கொண்டும் விழித்துக்கொண்டும் இருக்க வேண்டியதுதான். கதை தொடங்குவது பெரிதல்ல. வழக்கமான வர்ணனைகளோடு புதுமெருகு இழைப்பதும் சிரமமானதல்ல. அதனைத் தெளிவான ஒரு எல்லைக்கோட்டில் அமைத்து சக்தியோடு சொல்லவேண்டும். தெளிவாக, உணர்ச்சியுடன் கதை சொல்லும் ஆற்றல் இவருக்கு இயல்பாய் அமைந்தது. வரகவிகள் போன்று இவரும் வரகதையாளர்.

தமாஷாகப் பொழுது போக்குவதற்கும் மேல் எழுந்தவாரியாகப் படிப்பதற்கும் கதைஎழுதுவாருண்டு.

புதுமைப் பித்தன் அப்படி எழுதுபவரல்லர். இவர் கவியுள்ளம் படைத்தவர் கனவுலகில் சஞ்சரிப்பவர். தத்துவம் பேசுபவர். இவரது கதைகள் அநேகமாக சோகம் நிறைந்தவை. "ஒரு கவியுள்ளம்—சோகத்திலுல் சாம்பிய கவியுள்ளம்—வாழ்க்கை முட்களில் வீழ்ந்து இரத்தம் கக்குகின்ற உள்ளம் இவரது கதைகள் மூலம் பேசுகிறது'' என்று ஒரு ரசிகர் கண்டு உரைத்தனர். தாமஸ் ஹார்டியின் கதைகளைப் போலவே புதுமைப்பித்தனின் கதைகளிலும் இருளும் இன்னலும் கலக்கமும் குழப்பமுமே இடம் பெறுகின்றன. நம்பிக்கையின் நல்லொளியைக் காணும் வாழ்க்கையை இவர் வெறித்துப் பார்க்கிறார். அதன் விளைவுகளே கோரக்காட்சிகளுக்குக் குறைவில்லாத இவரது சோகக் கதைகள்.

வரையறையற்ற வர்ணனைப் பழக்கமும் எதையும், எப்படியும் எழுதலாம் என்ற துணிவும், தூய்மையான இலக்கிய சேவைக்கு குந்தகமாயின. உயர்ந்த எண்ணங்களை மக்களின் உள்ளத்தில் கோயில் கொள்ளச் செய்வது இலக்கியத்தின் நோக்கம். இந்நோக்கத்தை நிறைவேற்ற எழுத்தாளர் யாவரும் விழைகின்றனர். அவரவர்க்கமைந்த ஆற்றலுக்கேற்றபடி கவிதையிலோ, கட்டுரையிலோ, சிறு கதையிலோ அதனை நிறைவேற்ற முயலுகின்றனர்.

புதுமைப் பித்தன் சிறுகதைகள கலைத்திறன் அமைந்த கதைகளே. அவற்றில் விசித்திரமான அபிப்பிராயங்களும் வேண்டாத விளக்கங்களும் நகைச் சுவையின் பெயராலமைந்த ஆகாத சொற்சித்திரமும் குறுக்கிடா விட்டால் இவர் தற்கால இலக்கிய உலகில் ஒரு உன்னத நூலாசிரியர் என்ற புகழை எய்தியிருப்பார். என்றாலும் எவரும் பின்பற்ற முடியாத புதுமையான நடையில் சிறுகதை எழுதித்தந்த புதுமைப் பித்தன் அவரது சிறுகதைகளில் சிரஞ்சீவித் தன்மைபெற்று விளங்குகிறார் என்பதை மறுத்தற்கில்லை.

# திருவிளக்கேற்றிய தீரர்

## சோமசுந்தர பாரதியார்.

ஒல்காப் புகழமைந்த நல்லாசிரியர்களான தொல் காப்பியர், திருவள்ளுவர் போன்றவர்களின் வரலாற்றில் இருள் மண்டிக் கிடந்தது. அவர்களைப் பற்றிய கட்டுக்கதைகளே சரித்திரம் போன்று மிகுதியும் வழங்கின. அவைகளே இலக்கிய வரலாற்று ஏடுகளிலும் இடம் பெறலாயின. தொன்மை வாய்ந்த தமிழ்ச் சான்றோர்களின் பிறப்பும் பிறவும் புன்மை மிகுந்த இருள் படலத்தால் சூழப்பெற்றன. சம்பிரதாயங்கள், கர்ண பரம்பரைகள் முன்னோர் கூறினரென்பதால், பொன்னே போல் போற்ற வேண்டுமென்ற முரட்டு நம்பிக்கைகள் ஆகிய புல்லும் புதரும், கல்லும் காடும் நிறைந்து கிடந்த குகையில் துணிவுடன் சென்று திருவிளக்கேற்றித் தனித் தமிழ்ப் பெரியார்களாகிய தொல்காப்பியர் வள்ளுவரைப் பற்றிய உண்மை வர



லாறுகளை நாடறியச் செய்தவர் நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்களாவர்.

சோமசுந்தரர், பெயருக்கேற்ற அழகினர். மதியழகிற்கேற்ற மாண்புடைப் பெயரினர். கல்லூரி தந்த கலையறிவாலும் கூர்த்த மதி இளைஞர் கூட்டுறவாலும் கருத்து முதிர்ந்த புலவர்களின் தொடர்பாலும், உள்ளமுயர்ந்த வள்ளல்களின் உறவாலும், தமிழ் உரம்பெற்றவர். தேசிய கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரோடு இளைமையில் தொடர்ந்த நெருக்கமுடையவர் சிறிது இடைப் பிரிந்து, பின் இடையறாது உடன் பயின்று சோராது வளர்ந்த நேயமுடையவர். பண்டிதமணி, கதிரேசஞ் செட்டியாரோடும், புலவர் அரசன் சண்முகனாரோடும், இலக்கிய இலக்கணங்களை ஒத்து நோக்கி உண்மை கண்டவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பதவியையேற்று பெருமிதத்தோடு புலமையரசு செய்தவர்.

இவரது எழுத்துப் பணியில் செய்யுள் நூல்கள் மாரிவாயில் மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி என்பன. பாண்டவருள் நடுப்பிறந்த அர்ச்சுனனுக்கு அவனது தமிழ் மனைவி சித்திராங்கதை மேகத்தைத் தூதாக அனுப்பியதாக "சொல்லாரும் வனப்புடனே பொருள் வனப்பும், சுவை பலவும்" தோன்ற யாக்கப்பெற்றது மாரிவாயில். பொதிகை மலைச் சாரலில் மங்கலக் குறிச்சியை நிகழிடமாகக் கொண்டு புதினமாக இயற்றிய காதற்கதை மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி. இப்பாமாலைகள் இவரது செய்யுளாற்றுந் திறனுக்கு எடுத்துக்காட்டாக இலங்குவன. இலக்கியத்துறையில் மதிப்பிட்டுரைக்கத்தகும் கவியின் கனிவு. சொல்லின்

இழைவு, இவற்றில் காணப்படினும் எளிமை காணப் படுமாறில்லை

இவரது பேராற்றலை, உண்மை காணும் ஊக்கத் திலும், ஆராய்ச்சி நுண்மையிலும் காணவேண்டும். கண்ட உண்மையைக் கரவாது உரைப்பது இவர் கொண்ட கொள்கை. உண்மையைச் சொல்வதால் உண் டாகக்கூடிய பகைமையை இவர் பாராட்டுவதில்லை

முற்காலத்தில் புலமையாளரை கவி, வாதி, கமகன், வாக்கி என நால்வகைப்படுத்தி நவில்வர். வாதி என்பவன் காரணமும் மேற்கோளும் காட்டி பிறன் கொளகையை மறுத்து தன் கொள்கையை நிலை நாட்டு பவன் தொழில் துறையில் உயர் நீதிமன்ற வாதியாக விளங்கிய இவர், இலக்கியத் துறையிலும் உயர்ந்த நீதி வாதியாகவே நிலைபெறுகின்றார்.

தமிழ்ப் புலவரை ஆரியக்கலப்புடையவராக்கி தலை சிறந்த தமிழ் நூல்களுக்கு வடமொழிச் சார்பு கற்பித் துக் கொள்வதே பெருமை என்ற போலிப் புலமை எங் கும் பரவியிருந்த காலத்தில் அதனை எதிர்த்து நின்ற தீரர் தலைவர் பாரதியார். போலிப் புலமையாளரை தக்க சான்றுகளுடன் மடக்கியவர் பாரதியார். போலிக் கூற்றுக்கள் தலை காட்டாதவாறு தாக்கியவர் பாரதியார். "தமிழ்த் தொல்காப்பியரை ஆரிய பார்ப்பனராக்கிய தோடமையாமல் அவரை இல்லா அகத்தியத்திற்குப் பொல்லா மாணுக்கராக்கிய" புனை சுருட்டைப் பொடி படச் செய்தவர் பாரதியார். சில படிப்பாளிகள் இனப் பற்றே காரணமாக, திருவள்ளுவர், பகவன் என்ற பார்ப் பனனுக்கும் ஆதி என்ற புலைச்சிக்கும் பிறந்தவரென்று பிறழ உரைத்து மக்களை மயங்க வைத்தனராக, அர்சற்

குரிய கருமத் தலைவர் வள்ளுவரென்றும், வள்ளுவர் என்ற பெயர் இவருக்கு இத்தொழில்பற்றி வந்தது என்றும் தெளிவுற நிறுவியவர் பாரதியார்.

தமிழ் நாட்டிற்கும மொழிக்கும் இடையூறு நேர்ந்த போதெல்லாம் கிளர்ந்தெழுந்து அதனைப் போக்க முன் வந்த வீரர் பெருந்தகையாகிய பாரதியார், அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் செந்தமிழ் அறிவோடு வீரவுணர்ச்சியையும் ஊட்டிய பாரதியார், இன்று அறுபது கடந்தவராகி ஓய்வுபெற்றுப் பசுமலையில் உறைந்து வருகின்றார். இன்றும் அவரது தமிழ்ப் பணிக்கு ஓய்வில்லை. அவர் தொடர்ந்து எழுதி வருகின்ற தொல்காப்பிய ஆராய்ச்சி நூல்களை நமது பல்கலைக் கழகங்களென்கினும் பயன்படுத்திக்கொள்ளுமா?

## தேசியம் வழங்கிய தமிழ்வள்ளல்

### வ. உ. சிதம்பரம் பிள்ளை.

"நாட்டில் எங்கும் சுதந்திர வாஞ்சையை
நாட்டினாய் கனல் மூட்டினாய்
வாட்டியுன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன் வலி காட்டுவேன்"

என்று அந்நிய ஆங்கிலேய ஏகாதிபத்தியம் அன்று அலறியது.

"சதையைத் துண்டு துண்டாக்கினும்
உன் எண்ணம் சாயுமோ ஜீவன் ஓயுமோ?

இதயத்துள்ளே இலங்கு மகாசக்தி
ஏகுமோ நெஞ்சம் வேகுமோ?''

என்று வீர கர்ஜனை செய்தார் அண்ணல் வ. உ. சி.

மேலே தீட்டப்பட்டிருப்பது பாரதியார் வடித்துத் தந்த கவிதைக்காட்சி. அந்நியனின் ஆதிக்க ஆசையையும் தமிழனின் தன்மான எழுச்சியையும் ஒன்றோடொன்று மோதவிட்டுக் காட்டிய உரையாடலில் ஒருகட்டம். ஆங்கிலேயன் தேசபக்தனை நோக்கி அறை கூவுகின்றான். தேச பக்தன், திட சித்தத்துடன் விடையிறுக்கின்றான்.



அந்நாளில் தேச பக்தன் என்றால் வ. உ. சி. என்ற அளவுக்கு சிதம்பரனார் செல்வாக்குப் பெற்றிருந்தார். தென்னாட்டில் விடுதலை வேட்கைக்கு விதையிட்டவர் வ. உ. சி. அவர் சுதந்திர உணர்ச்சியின் சிகரத்தில் நின்று சோர்வின்றி உழைத்தார். அவர் கொந்தளிக்கின்ற அரசியல் சூழ்நிலையிலும் அமைதியான செயல் துறையில் இனிமையும் நிலைமையும் இயைந்த இலக்கியப் பணியாற்ற நேரந்தேடிக் கொண்டது நினைந்து போற்றுதற்குரியது. அரசாங்க அலுவல்களிலும் பொறுப்பு வாய்ந்த பிற பதவிகளிலும் இருக்கின்ற படிப்பாளிகளில்

பலர் நம் சொந்த இலக்கியங்களைப் பயில அவகாசமில்லை என்று அழாக்குறையாக சொல்லிக்கொண்டே யிருக் கின்றனர்கள். அன்னிய அரசோடு போர் தொடுத்துக் கொண்டு தமிழகத்தில் விடுதலை இயக்கத்தின் வீறு கொண்ட தலைவராக தொண்டாற்றிக்கொண்டு நெல் லைச் சீமையில் நிகழ்ந்த கலகங்களுக்கும் குழப்பங்களுக் கும் தாமே காரணகர்த்தர் என்ற பெயரையும் தாங்கிக் கொண்டு ஆங்கிலக் கப்பல் கம்பெனிக்குப் போட்டியாக தமிழ்க் கப்பலோட்டிக்கொண்டு சிறை சென்று செக் கிழுத்துக்கொண்டு எண்ணற்ற இடர்த்தொகுதி களிடையே பண்டைய பைந்தமிழ்ச் சேவை செய்த வ. உ. சி. அவர்களைத் தமிழ்த்தாய் தனது கண்ணின் கருமணி என்று போற்றுவாள்.

சிதம்பரனாருக்கு சுதந்திர வேட்கையைப்போலவே தமிழ் மொழி வேட்கையும் மிக்கிருந்தது. தமிழ் நூற் களைக் கருத்தூன்றிப் பயின்றார். வேதாந்த விஷயங் களில் வெகு ஆர்வங்கொண்டிருந்தார். இராமகிருஷ்ண மடாலய சாதுக்களின் இணக்கம் அவருக்கு இருந்தது. உலையா முயற்சியின் உருவாய் இலங்கிய அவர் தமிழின் தலையாய பனுவல்களான தொல்காப்பியம், திருக்குறள், சிவஞான போதம் போன்றவற்றில் அழுந்திய பற்று டையவர். தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தை இளம்பூரணர் உரையுடனும் திருக்குறளில் அறத்துப் பாலை மணக்குடவர் உரையுடனும் பதிப்பித்திருக்கிறார். சிவஞான போதத்திற்கு எழுதப்பெற்ற ஏனைய உரை கள் கடின நடையும் பெரிய அளவும் உடைய காரணத் தால் அவற்றைத் தமிழ் மக்கள் கற்பதற்கு கையிலெடுக் காதவாறு அச்சுறுத்துகின்றன என்பதால் அந் நூலுக்கு

எளிய நடையிலும் சிறிய அளவிலும் உரை எழுதியிருக்கின்றார். மெய்யறிவு, மெய்யறம் என்பன இவர் இயற்றித்தந்த அற நூல்கள். ஜேம்ஸ் ஆலன் எழுதிய ஆங்கில நூல்களை "மனம் போல வாழ்வு", "அகமே புறம்", "வலிமைக்கு மார்க்கம்", "சாந்திக்கு மார்க்கம்" என்ற மகுடங்களோடு மொழி பெயர்த்திருக்கின்றார். இந்நூற்களில் பல, இவர் கோயம்புத்தூரிலும் கண்ணனூரிலும் "காருண்ய அரசாங்கத்தின் கௌரவ விருந்தினராக" இருந்தபோது எழுதப்பெற்றவை.

இந்த நாட்டில் தேசியம் தமிழுக்கும் தமிழ்க் கலைக்கும் புதிய வாழ்வையும் நூதன பலத்தையும் அளித்திருக்கிறது. அந்நியராட்சிக்கு அபாய மனிதராகவும் வெள்ளையரை வெளியேற்றிய கிளர்ச்சிக் குழுவினரின் புரட்சித் தலைவராகவும் விளங்கிய சிதம்பரனார், செந்தமிழ்த்துறையில் சாந்தம் நிரம்பிய அந்தணராக அமைந்து தமிழ் வளர்த்த வள்ளலாயினர்.

ஆங்கிலக் கல்வியைப்பற்றிக் கருத்துரை தெரிவித்த சில தேசியத் தலைவர்கள் அக்கல்வியால் வெறுஞ் செலவு ஏற்படுவதேயன்றி பயன் எள்ளளவு மில்லையென்று பெரு முழக்கம் செய்தார்கள். ஆனால் வ. உ. சி. அவர்கள் ஆங்கிலக் கல்வியின் அரும் பயனை நன்கு உணர்ந்திருந்தார்கள். "என்னை ஆக்கி அளித்து இந்நிலையில் வைத்திருக்கின்ற எல்லாம்வல்ல இறைவனுக்கும், என்னைப் பெற்று வளர்த்து எனக்குக் கல்வி பயில்வித்த என் பெற்றோர்களுக்கும் தமிழையும் ஆங்கிலத்தையும் எனக்குக் கற்பித்து என்னை மேம்படுத்திய என் ஆசிரியர்களுக்கும் யான் நன்றி யறிதலுள்ளவனாயிருக்கின்றேன்" என்று எழுதியிருக்கின்றார். தமிழ் வளர்ச்சிக்கு உலகமொழியாகிய ஆங்கிலத்தின் உறவு இன்றியமையாதது என்பதை வ. உ. சி. தெளிவாக அறிந்திருந்தார்.

# புரிய எழுதிய பெரிய ஆசிரியர்

## விடுதலை வீரர் வ. ரா.



"அரசியலில் வாய் திறந்தால் இந்தியா மந்திரி அமெரிக்குக் கோபம் வருகிறது.

சமூகப் பிரச்சனைகளைப் பற்றிப் பேசினாலோ சனாதனிகளுக்கும் பாட்டிமார்களுக்கும் ஆத்திரம் பொங்கி எழுகின்றது.

தமிழ் இலக்கியத்தைப்பற்றிப் பேசினால் தனித் தமிழ்ப்புலவர் உள்ளம் குமுறிக்கொண்டு தமிழைக்

கெடுக்கத் தோன்றிய பாவிகள் என்று என்னைப்போன்ற வர்களுக்கு சாபம் கொடுக்கிறார்.''

மேல் குறித்தது வ ரா. வின் கனல் கக்கும் வாசகம். அவர் எவ்விதமான நிலையில் பொதுப் பணியாற்றினார் என்பதை இது புலப்படுத்தும் அரசியலில் சமூக அரங்கில் மொழித்துறையில் சேவைசெய்த வ. ரா. புரட்சிகரமான தேசியவாதி, ஜீவன் நிரம்பிய சீர்திருத்தச் செம்மல், பாமரரும் புரிய எழுதிய பெரிய ஆசிரியர்.

அமெரிக்குக் கோபம் வந்தால் என்ன? அந்த அதிகாரவர்க்கமே சின்மம்பொங்கிச் சீறிஎழுந்தால் என்ன?

''சொந்த நாட்டில் பரர்க்கடிமை செய்து
துஞ்சிடோம் இனி அஞ்சிடோம்''

என்று பாரதியார் உரைத்தது, வ. ரா வின் செவியைத் துளைத்து உள்ளத்தில் உணர்ச்சி யூட்டியது. இது அவரைத் தேச சேவைக்கு ஈர்த்த அழைப்புக் கீதமாயிற்று. எப் ஏ பரீட்சையை முடித்ததும் முடியாததுமாக தேசிய இயக்கத்தில் ஈடுபட்டார். புதுவையில் பாரதியாரோடு நான்கு ஆண்டுகள் ஒருங்கிருந்தார். அங்கேயே மகான் அரவிந்தரின் தொடர்பும் அவருக்குக் கிடைத்தது. வ. உ சிதம்பரம் பிள்ளையவர்கள் சுப்பிரமணிய சிவா முதலியவர்களோடு தோளொடு தோள் நின்று தேசப்பணி செய்தார். வங்கப் பிரிவினைக் கிளர்ச்சியிலும் அந்நியத் துணி பகிஷ்காரத்திலும் பங்கு பெற்றார். சிறைத் தண்டனை அடைந்தார். வீரசுதந்திரம் வேண்டி நின்ற வ ரா. ஆட்சியாளரின் உறுமலுக்கு அஞ்சாது உழைத்தார். வைரம் பாய்ந்த உள்ளம் படைத்த வ. ரா தென்னாட்டின் சுதந்திர சிற்பிகளிலே முன்னணியில் வைத்து எண்ணத்தக்கவர்.

வ. ரா. பிறந்தது வைதிகக் கோட்டையில். திருவையாற்றை அடுத்த திருப்பழனம் என்ற கிராமத்தில் மிராசுதார் குடும்பத்தில் தோன்றியவர். அவரது வாழ்க்கை முழுவதும் வைதிகத்தின் பகைவராக இருந்தார். வைதிகத்தின் அடிப்படையில் எழுந்த சாதிவேற்றுமைகளைக் கடிந்தார். பூணூலை விட்டெறிந்தார். சகுனம் சோதிடம் முதலியவற்றிற்கு நிந்தியப் [illegible] கொடுத்தார். கறந்தபால் கறந்தபடி [illegible] இயல்பினர். 1938-ல் அவர் வேறு ஜாதியைச் சேர்ந்த பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார். சாதிவேற்றுமை பாராட்டல் ஆகாது என்று [illegible] தேசம் செய்துகொண்டு [illegible]. [illegible] கையைச் சொல்லிய வண்ணம் வாழ்க்கையில் நிறுவிக் காட்டினார். "வ. ரா. பிறப்பால் அந்தணர். பிறவற்றாலோ நம்மவர், நல்லவர்," என்று [illegible] தோழர்கள் மகிழ்ந்து [illegible]. அவர் [illegible] திருத்தத்தில் நேர்மையான கருத்துடையவர். அவரது சீர்திருத்தக் கருத்துக்களை சனாதனிகள் எதிர்த்தார்கள். பாட்டிகளும் எதிர்க்கத் துணிந்திருக்கலாம். நாட்டின் முன்னேற்றத்தில் [illegible] அவற்றை வரவேற்பார். அவை [illegible] யும் அவற்றிற்கு உறுதியாக உண்டு.

"பண்டைத் தமிழ் நூல்களை அவர் [illegible] கற்றிருப்பதாகத் தெரியவில்லை. சங்க நூல்கள் [illegible] எல்லாவற்றிலும் ஆங்காங்கே பல விஷயங்களைத்தான் பார்த்திருப்பார்" இது வ. ரா. வைப்பற்றி ஒரு [illegible] சொன்னது. அவர் கற்றது எம்முறையோ நாம் அறியோம். ஆனால் அவரால் தமிழுக்குற்றதை நாம் அறியக் கூடும்.

தமிழகத்தில் பத்திரிகைகள் நம்மொழி வளர்ச்சிக்குச் செய்த சேவையைப்பற்றி வரலாறு எழுதும்போது வ. ரா. வைப்பற்றி நிறைய எழுதவேண்டிவரும் அவர் எத்தனையோ பத்திரிகைகளுக்கு ஆசிரியர்! பிரபஞ்ச மித்திரன், தமிழ் நாடு, வர்த்தக மித்திரன், சுயராஜ்யா, மணிக்கொடி, பாரததேவி, வீரகேசரி, நவயுகம் முதலிய பலப்பல பத்திரிகைகளின் ஆசிரிய பீடத்தமர்ந்து அவர் வரைந்த கட்டுரைகளும் தலையங்கங்களும் எவ்வளவோ? பத்திரிகைத் தமிழ் பாமரருக்கும் புரியும்படி எழுத வேண்டிய தமிழ். இம்முறையில் அவர் பொது மக்களுக்குச் சொல்ல வேண்டியதைத் தெளிவாகச் சொன்னார்; புரியும்படி சொன்னார்; செட்டோடு சொன்னார். வார்த்தைகளைச் சிதற அடிப்பதை அவர் வெறுத்தார். "சொற்களைத் தூவிச் சிதற அடிக்கிறார்கள் பல பக்கங்களிலும் அடிபட்டு விழும் சொற்கள் வீரிட்டு அலறி அழுகின்றன" என அவர் மனம் வெதும்பி உரைத்தார்.

சிறிது கற்றறிந்தவர்களுக்கும் புரிய வேண்டும் என்ற நல் முயற்சியில் உருவான அவரது புத்தகங்களில் பிரசித்தமானவை நடைச் சித்திரம், மழையும் புயலும், கோதைத் தீவு முதலியன. பாரதியாரைப்பற்றி அவர் எழுதிய "மகா கவி பாரதியார்" அதிகார பூர்வமான நூல். தமிழ்ப் பெரியார்கள் என்ற தலைப்பில் திரு. வி. க. ராஜகோபாலாச்சாரியார், என். எஸ். கிருஷ்ணன், கே. பி. சுந்தராம்பாள், ஆகிய இவர்களை உள்ளிட்ட 13-பெரியார்களைப்பற்றி எழுதியிருக்கிறார். இது புதிய முறையில் எழுதப்பெற்ற பேனாச் சித்திரம். மொழி பெயர்ப்பு வகையில் இவர் தந்துள்ள நூல்கள் "ஜவஹர்லால் நேரு சுய சரிதை" மஸானியின் "நமது இந்தியா" என்பன.

## கவிச்சுவை தரும் கலை அறிஞர்
### ரஸிகமணி டி. கே. சி.



கவிதை பண்டிதர் குழுவின் உரிமைச்சொத்து என்று கருதப்பெற்ற காலமும் இருந்தது. மூலநூலைக்

காட்டிலும் கடினமான உரைக்கு மரியாதை அதிகம். செய்யுளில் கல்லை உடைப்பதுபோல சொல்லைத் தெறித்து வார்த்தைக்கு வார்த்தை வழக்கப்படி பொருள் சொல்லும் கிளிப்பிள்ளைப் பாடமும் இருந்தது. பொதுமக்கள் கவிதையை உணர்ந்தார்களோ? உணர்த் தவேண்டுமென்ற ஆவலின் தோற்றம் இருந்ததோ? சந்தேகந்தான்.

இந்நிலையுணர்ந்து காலத்திற்கேற்ற சேவையைத் தொடங்கி வைத்தவர் திரு. டி. கே சிதம்பரநாத முதலியார் அவர்கள் இலக்கிய நண்பர்களிடையே இவருக்கு ரசிகமணி டி. கே. சி. என்று பெயர் இவர் தமிழ்க் கவியில் அன்பும் ஆவேசமும் கொள்பவர். அதிலே மனம் ஒன்றியவர். அதன் சுவை தேர்வதில் தன் வாழ்வை அர்ப்பணித்திருக்கிறார். ஒரு பாட்டைப் பல முறை பாடுவார் அநுபவித்து அநுபவித்துப் பர்டுவார். பாடியபடியே அதன் சுவையிற் கலந்து காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி உருகுவார்; கேட்பவரையும் உருக்குவார்

மக்கள் பெருந்திரளாய்க் கூடிய கூட்டத்தையும் ஒரு சில மாணவரைக்கொண்ட வகுப்பைப் போலவே மதிக்கின்றார். இவரது இனிய நண்பர்களான ரசிகர்கள் முதலிடந் தேடி முன் வரிசையில் அமர்ந்துகொள்வர். அவர்களை இலேசில் விடுவாரா? "சர்க்கரை இனிக்கும்" என்பார். இதற்கு ஆட்சேபனை இல்லை. இவர் இந்த அளவில் விடுவதில்லை. "என்ன இனிக்குந் தானே?" என்ற கேள்வியையும் எழுப்புவார். பதில் சொல்ல வேண்டிய அவசியமேயில்லை என்று மௌனமாய் இருக்கும் அன்பர் பாடு ஆபத்தாய் முடியும்.

"என்ன ஐயா தங்களைத்தானே பதில் பேசாமல் இருக்கிறீர்களே! தங்கள் ஊரில் 'சர்க்கரை இனிக்காதோ" என்று அவரைப் பெயர் சொல்லி அழைத்துக் கேட்பார். இப்படியே பேச்சில் இனிப்பையும் சிரிப்பையும் கலந்து களிநடம் புரியச் செய்வார்.

இலக்கிய உண்மைகளை அப்பட்டமாக எடுத்துச் சொன்னால் யார் கேட்கிறார்கள்? ஆகவே அவற்றை சம்பவத்தின் வழியாகவும் சுவை படவும் சொல்கின்ற நெறியை மேற்கொண்டிருக்கிறார். ஒரு உதாரணம். ஒன்பது சுவையைப் பற்றிப் பேசவேண்டும். பண்டிதர்கள் எப்படிச் சொல்வார்கள்? அவர்களுக்கென்ற அலாதியான ஒரு பாணியுண்டல்லவா? அந்தப் பாணியில் ஒரு பண்டிதர் பகர்வதைக் கேட்போம். "அறுசுவை மருவிய நால்வகை உணவும் உடலினை வளர்ப்பன. ஆராய்ந்து அருந்துவோர்க்கு வலிமையும் வனப்பும் நல்கும் இயல்பின. அப்பரிசே ஒன்பான் சுவை மருவிய நால்வகைக் கவிகளும் உளத்தையும் உயிரையும் வளர்ப்பன, ஆராய்ந்து துய்ப்போருக்குச் செம்மையும் உறுதியும் பயக்கும் தன்மையவாதலின்" இதே பொருள்பற்றி டி. கே. சி. சொல்வதையும் கேட்போம். "திருநெல்வேலியிலிருந்து ரயிலில் வந்துகொண்டிருந்தேன். ரயில் ஒரு ஸ்டேஷனில் நின்றது அங்கே இரண்டு வார்த்தைகளை ஒரு விளம்பரப் பலகையில் பார்த்தேன். நவ ரஸ என்ற இரண்டு வார்த்தைகளும் கண்ணுக்குத் தெரிந்தன. அடடே! இங்கே ஏதோ கலைச் சங்கம் கூட்டியிருக்கிறார்களோ என்று நினைத்துக் கொண்டே யிருந்தேன். ரயில் நகர்ந்தது. 'கிளப்' என்ற வார்த்தையும் தெரிந்தது. சரி, நவரஸ கிளப்

தான், சங்கம் அல்ல என்று தெரிந்து கொண்டேன். நம்முடைய சகோதரிகள் பரிமாறுகையிலே ஆறுரஸம் என்று சொல்லுகிறார்கள் ஆனால் ஆறு அல்ல அறுபது ரஸங்களைப் பார்க்கிறோம். எத்தனையோ ரஸங்கள் அருமையாக வருகின்றன. இளங்கோ நவரஸம் என்று ஒன்பதோடு நிறுத்திக்கொண்டார். ரொம்ப அடக்க முள்ளவர்தான். நாம் பேச எடுத்துக்கொண்ட ரஸம் வேறு துறையில். நாவினால் அல்ல; உள்ளத்தால் அனுபவிக்கும் ஒன்பது ரஸங்கள் அவை." டி. கே. சி. பேச்சில் இதய ஒலியைக் கேட்கலாம். தெளிவு காணலாம்.

அவரது எழுத்தைக் கவனித்தால் அவர் இலக்க ணத்தைக் கவனிக்கிறதில்லை என்பதை நாம் கவனிக்கா மல் இருக்க முடியாது. "வ ள வேற்றுமையில் றடவும்" என்ற நன்னூல் விதியில் அவருக்கு நம்பிக்கை யிருப்ப தாகத் தெரியவில்லை முருகில் ! சிறந்த - முருகிற் சிறந்த என்றும் பால் | கடல் = பாற்கடல் என்றும் தைரியமாக எழுதுகின்றார் பண்டிதர்கள் இலக்கணத் தைக் கூறி மூளையைக் குழப்பி விடுகிறார்கள் என்று துணிந்து கூறுகின்றார். வடசொற்களை வகை துறை யின்றிக் கலக்கின்றார். குழந்தைகளுக்கும் விளங்க வேண்டும் என்ற நல்ல எண்ணத்தாலும் பேசுவதைப் போலவே எழுதவேண்டும் என்ற கொள்கையாலும் கொச்சைச் சொற்களை நிரம்பச் சேர்க்கின்றார். நிரம்ப என்ற சொல்லின் உருச் சிதைந்த ரொம்ப இவருக்கு மிகவும் பிடித்திருக்கின்றது.

மக்கள் விரும்புகின்ற இலக்கியத்தின் வழியாய் சமுகத்தில் இனிமையொளி பாய்ச்சலாம். கம்பராமா

யணம், முத்தொள்ளாயிரம் குற்றாலக் குறவஞ்சி தனிப் பாடல் ஆகிய நூல்கள் இத்தகைய இனிமையொளி பரப்பும் பண்பாடமைந்தவை. இதனை அறிந்து செய லாற்ற ஒரு இயக்கத்தை உருவாக்கியவர் டி. கே. சி. தமிழ் இலக்கியத்திற்கும் தங்களுக்கும் தொடர்பில்லை என்று எண்ணிக்கொண்டிருந்தவர்களுக்குத் தமிழ்க் கவிதை வெறியூட்டி அவர்களைக் கொண்டே தமிழ்ப் பண்பாட்டின் பெருமையைப் பரப்புகின்ற டி. கே. சி. ஒரு பெரிய சாதனைக்காரர்.

## கவிமணி

### தேசிகவிநாயகம் பிள்ளை

எது கவிதை? பல்வகைத் தாதுக்கள் சேர்ந்த உடலுக்கு உயிர் போன்று பல சொற்களால் பொருளுக்கு இடமாக, அசை, சீர், தளை, அடி தொடைகளால் உணர்வில் வல்லவர் அணிபெறச் செய்வது கவிதை என்கிறார் பவணந்தி முனிவர். சீர், தளை, அடி, தொடை என்பவற்றை யெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டு கவிதையைப் பற்றிய சிறந்த கருத்துரை வழங்குகின்றார் திரு. வி. க. அவர் கூறுகின்றார். “பாட்டு என்பது சொல்லடுக்கன்று; அணிச் செறிவன்று; யாப்புக் கட்டுமன்று



மனத்தினின்று விரைந்தெழும் மகிழ்ச்சியின் பொங்கலே பாட்டாகும்". கவிதையைவிட்டு ஓடோடியும் போவார் இதைக் கேட்டால் அதனை நோக்கி விரைந்தோடி வருவார் என்பது திண்ணம்.

இன்னமும் நெருங்க அழைத்துச் செல்கிறார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவரைக் கேட்போம். அவர் கவிதையின் இயல்பைக் கவிதையாலேயே

உள்ளத் துள்ளது கவிதை
இன்பம் உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்—உண்மை
தெரிந்துரைப்பது கவிதை

என்பது கவிமணியின் அநுபவ வாக்கு. இதனை இசைத்து அறியவேண்டும். அறிந்தால், நாமும் கவிதையை உணர்ந்து கொண்டோம் என்று ஆனந்தத்தால் துள்ளாமல் இருக்கமுடியாது. கவிதையைப் பற்றி நாம் சொல்லக்கூடிய தனைத்தையும் கவிமணி அணிபெறச் சொல்லி யிருக்கிறார் என்று அகங்காரம் கொள்ளாமலும் இருக்க முடியாது.

கவிதையைப்பற்றிய இக்கவிதையே கவிமணியின் கவிதைகளுக்கெல்லாம் உயிர் நாடியாக விளங்குகின்றது. ஏன்? எல்லாக் கவிதைகளுக்கும் இதுவேதான் உரைகல் அல்லவா?

கவிதை உள்ளொளியின் பருவ மலர்ச்சி. இதய ஆழத்திலிருந்து எழும் இனிய கானம். அது உள்ளத்தின் உண்மையிலிருந்துதான் ஊற்றெடுக்க வேண்டும். உணர்வினில் வல்ல விநாயகம் பிள்ளையவர்களுக்கு

இவை அநுபவ உண்மைகள். இனிமையும் தெளிவும் இவர்தம் கவிதைப் பறவையின் இரு சிறகுகள். ஒரு சில சுவைத்துப் பாருங்கள்.

பாலைவனம் சோலைவனமாக வேண்டும்
பசுங்கிளிகள் அங்கிருந்து பாடவேண்டும்
சாலைகளிற் பல தொழிலும் பெருக வேண்டும்
சபைகளிலே தமிழெழுந்து முழங்க வேண்டும்.

*

ஆலமரத்தின் நிழலிதுவே—நல்ல
ஆயிரங்காலெழு மண்டபமாம்
சாலவே தங்கு பறவை யெல்லாம்—அங்
சங்கீதம் பாடிடும் பாடகராம்.

மங்கையராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவஞ் செய்திட வேண்டுமம்மா
பங்கயக் கைநலம் பார்த்தலவோ—இந்தப்
பாரில் அறங்கள் வளருமம்மா.

* * *

ஔவைக் கிழவி நம் கிழவி
அமுதின் இனிய சொற்கிழவி
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி
நெல்லிக் கனியைத் தின்றுலகில்
நீடுவாழும் தமிழ்க்கிழவி
வெல்லற்கரிய மாந்தரெல்லாம்
வியந்துபோற்றும் ஒரு கிழவி

கூழுக்காகக் கவிபாடும்
கூனக் கிழவி அவளுரையை
வாழும் வாழ்வில் ஒருநாளும
மறவோம் மறவோம் மறவோமே.

ஒரு புலவர் இளைஞராயிருந்த காலத்து இயற்றிய ஒரு கவிதையின் பொருளைக் கூறுமாறு பல ஆண்டுகளுக்குப் பின் கேட்டபோது அப்புலவர் "இக்கவிதையை நான் எழுதுங் காலத்தில் எனக்கும் கடவுளுக்குந்தான் அப் பொருள் தெரிந்திருந்தது. இப்போதோ அது கடவு ளுக்கு மட்டுந்தான் தெரியும் என்று சொல்லி நழுவி னாராம் அந்த மாதிரிப் புரியாக் கவி புனையும் அற் புதக் கலையை நல்ல வேளையாக நமது கவிமணி கற்றுக் கொள்ளவில்லை.

கவிமணியின் கனிந்த உள்ளத்தில் பூத்த கவிமலர் கள் சேர்ந்த நூலுக்கு மலரும் மாலையும் என்று பெய ரிட்டிருக்கிறார்கள். அந்நூல் கவிஞரின் இதயப் பூம் பொழில். அப்பொழிலே இன்னிசைத் தேனருவி பாய்ந்து வளம் செய்கின்றது. அங்கே தெய்வம் போற் றும் அஞ்சலி ஒலிக்கின்றது. ஔவையார், பாரதியார், திருவள்ளுவர், கம்பர் ஆகிய இலக்கியப் பெரியார்களில் ஒளியுடைய உருவங்கள் வனப்புடன் விளங்குகின்றன. பாரசீக ஆங்கிலக் கலைச் செல்வங்களின் சின்னங்களை யும் காணலாம். பிச்சைக்காரரின் கும்மாளத்தைக் கேட் கலாம். உளத்திற்கும் உணர்விற்கும் விருந்து பெற்று மகிழலாம். வையகத்தையும் வாழ்வையும் பற்றி வகை வகையாய் அறியலாம். நாட்டையும் சமூகத்தையும் பற் றிய பல நல்ல சங்கதிகளைத் தெரிந்து கொள்ளலாம்.

உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா—மிக்க
ஊக்கம பிறக்குமொரு பாட்டிலேயடா
களளின் வெறி பிறக்குமோர் பாட்டிலேயடா—ஊற்றுய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா

என்று தேசிக விநாயகம் பிள்ளை பாரதியார் பாட்டுக்களைப் பற்றிச் சொன்னது அவர் தம் மலரும் மாலைப் பாட்டுக்களுக்கும் மிக மிகப் பொருந்தி யிருப்பதைக் காணலாம்.

தேசிக விநாயகம் பிள்ளை பாரதியாரை நெஞ்சாரப் போற்றுபவர். நடை சந்தம் முதலிய அம்சங்களில் அவரைப் பின் பற்றுபவர். ஆனால் பாரதியாரின் போக்கு வேறு தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் போக்கு வேறு. பாரதியார் பாக்களில் புயல் வீசுகின்றது. பிள்ளையவர்களின் பாக்களில் தென்றல் தவழ்கின்றது. பாரதியார் பாக்களில் சக்தியின் தாண்டவம் காண்போம். பிள்ளை யவர்களின் பாக்களில் அருளின் சீரான அசைவினைக் காண்போம். பாரதியார் பாக்கள் இடி முழக்கத்தோடு கொட்டும் பெருமழை. பிள்ளையவர்களின் பாக்கள் இன்னிசை இசைத்துவரும் அருவியோட்டம் பாரதியார் பாட்டுகளில் பெரும் பகுதி வீர சுதந்திர உணர்ச்சிக்கு வித்திடப் பயன்பட்டது. பிள்ளையவர்களின் பாக்களிற் பெரும் பகுதி பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்க்கப் பயன் சுரந்து நிற்கிறது.

# யாழ் ஒலி இசைக்கத்தோன்றிய பேரொளி

## சுவாமி விபுலாநந்தர்

*அவ்வாண்டில் தமிழ்ப் பேரவையின் தொடக்க விழாச் சொற்பொழிவாற்ற வருகின்றவர் விபுலாநந்தர் என விளம்பரஞ் செய்திருந்தார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேரவை விழா என்ருல் வெகு பிரமாதமாக நடைபெறும். அதுவும் சொற்பொழிவாளர் விபுலாநந்தர் என்ருல் பின்னர் சொல்லவும் வேண்டுமா? அடிகள் ஏற்கனவே அப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர் எனவே யாவரும் அவருடைய வருகைக்காக உரிமைத் தொடர்போடும் பெரு விருப்போடும் காத்திருந்தனர். விபுலாநந்தஜீ என்று எப்படியோ விளம்பரப் பலகையில் பெயர் ஏறியிருந்தது. மாணவர்களிற் பலர் அடிகள் வடநாட்டினரோ என்று ஐயுற்றதற்கு இந்த ஜீயே காரணம். அடிகள் அப்பொழுதுதான் வடக்கே மாயாவதி என்னும் இடத்திலிருந்து வருகிருர்கள் என்பதும் அம் மாணவ அன்பர்களின் ஐயத்தை ஊர்ஜிதப்படுத்த ஒருவாறு உதவியது.



அவர்கள் விபுலாநந்தஜீயை நேரில் பார்த்தார்கள். ஐயம் நீங்கப் பெற்ருர்கள். அவருடைய வடிவான

*28-2-1942.

யாழ்ப்பாண இன்னிசைப் பேச்சு அவர் ஈழநாட்டினரே என்பதை இடித்து முழக்கியது அடிகள் கரும்பொன் நிறத்தினர், கட்டுடல் பொலிவினர்; காட்சிக்கு இனியர்; வெண்கல ஒலியினை நிகர்த்த பண்கலந்த தொனியினர்; கேட்டார்ப் பிணிக்கும் திறத்ததாய்க் கேளாரும் வேட்ப மொழியும் நாநலம் அமைந்தவர்.

சுவாமி விபுலாநந்தர் நம்மவரின் பழம் பெருமையை ஆய்ந்தறிந்து அறிவித்தார் அதைப் போலவே குறைகளையும் கண்டு சொல்லி அவைகளை நீக்கும் வழிகளைச் சுட்டினார். தமிழர் நிலை அன்றும் இன்றும் என்பதைப் பற்றி அடிகளின் கருத்தைச் சுருங்கக் கூறுவேன்

''நாம் பல்லாயிரம் ஆண்டுகளாக இந்நாட்டில் செம்மையோடு வாழ்ந்தோம. இன்றும் ஓரளவிற்கு ஆற்றலோடு வாழ்கின்றோம். வள்ளுவனையும் இளங்கோவையும் கம்பனையும் ஈன்றளித்த எமதன்னை இந்நாளிலும் பாரதி என்ற வீர கவிஞனை உலகிற்கு உதவினள்.''

சங்க காலத்திலிருந்த தமிழ் மக்களின் மனவலியும் உடல்வலியும் இன்று நம்மிடத்தில் குறைவுற்றுக் காணப்படுவனவாயினும் அவரது வலிமைக்குக் காரணமாயிருந்த வாய்மையும் ஈகையும் தமிழ் மக்களிடத்தில் இன்றும் விளங்குகின்றன.

தமிழன் உண்மையுடையவன்; நடு நிலைமையுடையவன்; இயல்பாகவே ஈகை என்னும் பெருங் குணமுடையவன் இக் குணங்கள் நம்மிடத்து நிலைபெற்றிருக்கும் வரையில் நாம் உயிர் வாழ்வோம்; எல்லா உயர்வும் நம்மை வந்து எய்தும்.

.......தேச சரித்திரத்தைக் கூறும் நூல்கள் தமிழ் மொழியில் இல்லை. இக்குறைவை நாம் விரைவில்

நிறைவு செய்யவேண்டும். அண்டப் புளுகுகள் பொலிந்த புனைந்துரைக் கதைகளையும் வாளா பொழுது போக்கிற்காக ஏற்பட்ட பொய்க் கதைகளையும் படிப்பதைச் சிறிது காலம் நிறுத்திவிட்டு உலகின் பல பாகங்களிலுமுள்ள மக்களின் வாழ்க்கையை நன்கு புலப்படுத்தும் உண்மைச் சரித்திரங்களைக் கற்க முயல்வோமாக.

மறுமலர்ச்சி எழுத்தாளர்க்கு சுவாமிகள் கூறும் அறிவுரை "நீங்கள் உங்கள் மனோதர்மத்தின்படி நன்றாக எழுதுங்கள். புதியன புதியனவாக எழுதித் தமிழை வளருங்கள். ஆனால் மற்றவர்களைக் கண்டிக்கத் துணியாதீர்கள். எழுத்தில் எப்பொழுதும் சொற்செட்டும் இலக்கணமும் கருத்து ஆழமும் இருக்க வேண்டியது பிரதானம்.

அருமையாக எழுதக் கூடிய எத்தனையோ எழுத்தாளர்கள் தமிழிலக்கியங்களிலே பயிற்சியின்மையாலோ—பயிற்சிக் குறைவினாலோ—சில இடங்களில் வழுக்கி விழுவதைப் பார்க்கப் பரிதாபமாயிருக்கிறது. இவர்கள் மனது வைத்துக் கொஞ்சம் தமிழ்நூற் பரிச்சயம் செய்து கொண்டால் எவ்வளவு நலமாயிருக்கும் தமிழ் நாட்டுக்குத் தேவை பழந்தமிழ்நூற் பரிச்சயம் உள்ள புதுமை எழுத்தாளர்களே!"

துறவுநிலை மேற்கொள்ளுமுன் விபுலாநந்தரின் பெயர் மயில்வாகனன். மயில்வாகனன் 1916 ல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டித பரீக்ஷையில் தேர்ந்தார். 1920 ல் பி. எஸ்சி. லண்டன் பரீக்ஷையில் வெற்றி பெற்றார். பண்டித மயில்வாகனனார் பி. எஸ்சி. லண்டன் செந்தமிழ்ச் சஞ்சிகையில் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரை

களில் பொருள்நூல் சிறப்பு, சூரிய சந்திரோற்பத்தி, மலை கடல் உற்பத்தி முதலியன. 1922-ல் மயிலாப்பூர் இராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்த மயில்வாகனனூர் பிரபோத சைதன்யர் என்ற பிரமசரிய ஆசிரமப் பெயர் சூட்டப் பெற்ருர். இந் நிலையில் இராமகிருஷ்ண விஜயம் (தமிழ்) வேதாந்த கேசரி (ஆங்கிலம்) என்ற பத்திரிகைகளுக்கு ஆசிரியர் பொறுப்பேற்ருர். இக்காலத்தில் சென்னையில் பல சபைகளில் ஆய்வுரை நிகழ்த்தினூர். செந்தமிழுக்குத் தொடர்ந்து கட்டுரை வழங்கினூர்.

1924-ல் துறவு பூண்டு விபுலாநந்தர் என்று பெயர் பெற்ருர். அடுத்த ஆண்டில் ஈழநாட்டில் சிவாநந்த வித்தியாலயம் நிறுவி அதன் அதிபராக அரிய சேவை செய்தார். 1931-ல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்தார். மூன்று ஆண்டுகள் அப்பதவியைத் திறம்பட நிர்வகித்து இமய மலைக்கு வடக்கிலே திருக்கயிலாய மலைக்கு யாத்திரை செய்தார். இமயச்சாரலில் உள்ள மாயாவதி என்னுமிடத்தில் 1936—41 ல் பிரபுத்த பாரத் என்ற பத்திரிகை ஆசிரியரானூர். 1943 ல் இலங்கைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராக நியமனம் பெற்ருர்.

1947 மே மாதம் 5, 6, தேதிகளில் கும்பகோணத்தையடுத்த திருக்கொள்ளம்பூதூரில் தமது யாழ் நூலைப் புரவலர்கள் புலவர்கள் முன்னிலையில் அரங்கேற்றினூர். அந்நூல் 15 ஆண்டுகளாக ஆராய்ந்து எழுதப்பெற்ற அரியநூல். அடிகளாரின் நீண்டகால ஆராய்ச்சியின் விளைவாகத் தொன்மை வாய்ந்த யாழின் செம்மையான இயல்பு புலன் ஆனது அடிகளாரும் அரங்கேற்றம் நிகழ்ந்த இரு திங்களுள் மறைந்தார்கள். இந்த யாழ்

நூல் காரணமாக, விபுலானந்தர் யாழ் ஒலி இசைக்கத் தோன்றிய பேரொளியாக விளங்குகின்றார்கள்.

அடிகள் இயற்றி, மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் பிரசுரித்த, மதங்க சூளாமணி என்ற நாடகநூல் புதிய உருவில் வெளி வரவேண்டும் அவர்கள் செந்தமிழிலும், தமிழ் பொழிலிலும் பிற சஞ்சிகைகளிலும் வெளியிட்ட கவிதைகளையும் கட்டுரைகளையும் தொகுத்துத்தருவோர் திறமான இலக்கிய சேகரம் செய்தவராவர்.

---

## சொல்லின் செல்வர்
### ரா. பி சேதுப்பிள்ளை

திருநெல்வேலியை அடுத்த சிற்றூர் ராசவல்லி புரம். பிரான் அணைந்த பெருமாள்பிள்ளை அவ்வூரினர். அவரது அருமைத் திரு மகனாரே சேதுப்பிள்ளை.



"செந்தமிழுக்குச் சேதுப்பிள்ளை" என்பர் சுத்தானந்த பாரதியார். சேதுப்பிள்ளையைக் கேட்டால் "செந்தமிழுக்குத் திருநெல்வேலியே" என்று சத்தியம் செய்து சொல்லிவிடுவார். இதனால்மற்றப் பகுதியினர் பகைத்துக் கொண்டாலும் இவர் அதனைப் பொருட்படுத்துவதில்லை. பாண்டித் தமிழே பசுந்தமிழ்

என்று முரசு கொட்டப் பின்வாங்குவதில்லை. சேதுப் பிள்ளை யவர்களைப்பற்றிச் சொல்லும்போது செந்தமி ழைச் சேர்த்துச் சொல்வது எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானது இவர் பிறந்த அகமாகிய நெல் லைச் சீமையையும் சேர்த்துக்கொள்வது.

வழக்கறிஞர் பிள்ளையவர்கள் சில ஆண்டுகள் திரு நெல்வேலியில் நியாயவாதியாக அலுவல் பார்த்தார். அந்த அலுவலில் இவர் மனம் நிலைக்கொள்ளவில்லை. எத்திசையும் புகழ் மணக்க இருந்த பெரும் தமிழ் அணங்கின் இனிய அழைப்பின் குரலைக் கேட்டார். தாய்மொழித் தொண்டிற்குத் தன்னை அர்ப்பணித்தார். பச்சையப்பன் கலாசாலையில் சிலகாலம் போதகாசிரிய ராக இருந்தார். பின்னர் அண்ணாமலைப் பல்கலைக் கழ கத்தில் விரிவுரையாளராகப் பணிசெய்து வந்தார் சென் னைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகளாக உதவி ஆசி ரியராகப் பதவி வகித்தார். தற்போது தமிழ்த்துறைத் தலைவராக விளங்குகின்றார். இவரே சென்னைப் பல் கலைக் கழகத்தின் முதல் தமிழ்ப் பேராசிரியர்.

அரசியல் பேச்சென்றால் ஆயிரக் கணக்கான மக் கள் திரண்டு சேர்ந்து செவிமடுப்பர். சீர்திருத்தச் சொற்பெருக்கென்றாலும் அப்படியே. பெருங்கூட்டங் கூடி ஆர்வங் காட்டுவர். இலக்கியச் சொற்பொழிவுக்கு ஈடுபட்டுக் காது கொடுப்பவர் வெகு சிலரே

பேச்சுத் திறத்தில் பிள்ளையவர்களுக்கு 'சொல்லின் செல்வர்' என்ற பெயர் ஏற்பட்டது எப்போதோ? இலக்கியப் பேச்சாளர் சொல்லின் அநேகர் எழுந்து செல்வர்' என்ற நிலைதான் இருந்தது. சேதுப் பிள்ளை சொல்லின் அனைவரும் விரும்பிக் கேட்பர். அமர்ந்து

அமைதியாய்க் கேட்பர் பழந்தமிழ் இலக்கியங்களுக்கு இளநலமுடைய புதுமெருகு கொடுத்துப் பலரும் சுவைக்கும் வண்ணம் பக்குவமாக வழங்கும் இன்சொல் லுடைமை பேச்சு நடையில் பெருமிதம், விளக்குந் தோர ணையில் அழகாறறல் அவரது தனியுடைமை. இவர் உரைக்குஞ் சொல் உள்ளத்தைத் தைக்குஞ் சொல். உண்மையை உணர்த்துஞ் சொல். அறிவைப் புகட் டுஞ் சொல். ஆண்மையை வளர்க்குஞ் சொல் பகை மையை எரிக்குஞ்சொல். பண்பைப் பெருக்குஞ் சொல். இவர் நுண்பொருள் விரித்துரைக்கும் நூல் விரிவுரை யாளர் மட்டுமல்ல. நெஞ்சம் உருகி உணர்ச்சி மிகுந்து பேசும் வீரப் பேருரையாளர்.

நம் நாட்டில் இவர் செல்லாத ஊரில்லை. பேசாத மன்றமில்லை இவருடைய சொற்பொழிவைக் கேட்டு மகிழாத தமிழர் இரார். சென்னையில் இவர் Y. M. C. A. பட்டி மன்றத்தில் ஐந்து ஆண்டுகள் தொடர்ந்த சொற் பொழிவுகள் செய்திருக்கிறார். தென்னிந்திய சைவ சித் தாந்த சபையின் ஆதரவில் நடைபெற்ற புறநானூற்று மகாநாட்டிற்குத் தலைமை தாங்கியவர் இவரே. 1949 ல் பம்பாயில் நடந்த பாரதி விழாவில் கலந்துகொண்டு அவ் விழா தேசிய அடிப்படையில் நாடெங்கும் கொண்டா டப் பெறவேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார் யாழ்ப்பாணத்தில் நிகழ்ந்த தமிழ்த் திருவிழாவின் இலக் கியப் பகுதிக்குத் தலைமை பூண்டு தமிழ் எங்கெங் கெல்லாம் பேசப்படுகிறதோ அங்கங்கெல்லாம் அவ்விழா வினைக் கொண்டாடவேண்டுமென்று கூறி, தென் ஆப் பிரிக்காவில் அவ்விழா நடைபெறுதற்கு அடிகோலி யிருக்கிறார்.

ரிசியமூக பர்வதத்தில் அநுமனுடைய சொல்லாற்றலை வியந்த இராமன் இலட்சுமணனை நோக்கி "யார் கொல் இச்சொல்லின் செல்வன் ?" என்று கேட்டானாம். அனுமான் ஆற்றலோடு பேசியது அதிசயமானதல்ல. அநுமனையும், ஏன் பிற நாடக பாத்திரங்களையும் அங்ஙனம் பேசவைத்த காப்பிய கவிஞரின் சீரிய கூரிய திண் சொற் புலமையே பெரிதெனப் போற்றுவோம்.

காப்பியக் கவிஞரின் சொற்பெருங் கடலில் குளிக்கும் பனுவற் புலவர் சேதுப்பிள்ளை. இவரது பேச்சிலும் எழுத்திலும் கம்பன் மணமும் சேக்கிழார் மணமும் கலந்து கமழும். திருவள்ளுவரும் திருத்தக்க தேவரும் ஒளவையாரும் அமரகவி பாரதியாரும் தோன்றித் தோன்றிப் பின்னணி கீதம் இசைப்பர்.

பிள்ளையவர்களின் சொற் செல்வத்தில் திளைத்த இலக்கிய நண்பர்கள் இவரைச் 'சொல்லின் செல்வர்' என அழைத்து மகிழ்ந்தனர். அன்பர்களின் ஆசையுரைக்கு முத்திரையிட்ட முறையில் 1951 செப்டம்பர் மாதம் 9 ம் தேதி தருமபுர ஆதீனத்தில் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், டாக்டர் ஆர். கே. ஷண்முகஞ் செட்டியாரை யுள்ளிட்ட ஆன்றோர் அரங்கில் இவருக்குச் 'சொல்லின் செல்வர்' என்ற பட்டத்தை வழங்கியுள்ளார்கள்.

'சொல்லின் செல்வர்' எழுத்தின் செல்வரும் ஆவர். இவருடைய நூல்களில் தமிழ்நாட்டு நவமணிகள் இலக்கியச் செல்வியர்களான ஒன்பது பெண்மணிகளின் சரிதைகளை உரைப்பது. திருவள்ளுவர் நூல் நயமும் சிலப்பதிகார விளக்கமும் இலக்கியத்திறனாய்ந்து தெளியும்

ரசனை நூல்கள். ஊரும் பேரும் ஆராய்ச்சி நூல் 'தமிழர் வீரமும் தமிழ் விருந்தும் கலை விருந்தளிக்கும் கட்டுரைத் தொகுதிகள். கடற்கரையிலே என்னும் நூலில் திருவள்ளுவர் இளங்கோ வ உ. சி. பாரதியார் முதலியவர்களைக் கரையில் நிறுத்தி அவர்களைக் கடலை நோக்கிப் பேச வைத்திருக்கும் பெற்றி ஆசிரியரின் கற்பனைச் சிறப்பிற்கும் சொல்வளத்திற்கும் சான்றாக விளங்கு

பிராஸமே இவர் தம் நடையின் சுவாஸம் என்று சொல்லப்படும் அளவிற்கு இவர்தம் எழுத்திலும் பேச்சிலும் யாண்டும் மலிந்து காணப்படுகின்றது.

---

## கவர்னர் ஜெனரல் தமிழ் மூதறிஞர்

### சக்கரவர்த்தி இராஜகோபால ஆச்சாரியார்

சக்கரவர்த்தி இராஜகோபால ஆச்சாரியார், இப் பெயரை இலகுவாகச் சொல்லிவிட இயலாது. வறுவறச் சொல்லவேண்டுமானால் வாய் நிறைத்துத்தான் சொல்லவேண்டும். பக்தி சிரத்தையோடுதான் உச்சரித்துச் சொல்லவேண்டும். ஆச்சாரியார் அவர்களின் நேயர்கள் அதனைச் சிந்தையில் கொண்டு 'சி. ஆர்' என்று செப்புவர். ராஜாஜி என்று ரத்னச் சுருக்கமாக அழைப்பர். இன்று



ராஜாஜி என்ற பெயரே நம்மிடையே பெருவழக்காக வழங்கியும் விளங்கியும் வருகின்றது.

சுருங்கச் சொல்லல்; விளங்க வைத்தல். இது ராஜாஜி மேற்கொண்ட தமிழ்ப் பணியின் தனியான அழகு ஒளி வீசும் அரிய பண்பு. அரசியலில் பாமர மக்களுக்கும் புரியக்கூடிய விதத்தில் எளிமையுடன் பேச வழி செய்தவர் இவரே. பிற தலைவர்கள் (தமிழ் நாட்டுத் தமிழ்த் தலைவர்கள்தான் வேறு யாருமில்லை) தங்களுக்குத் தமிழ் சரியாகப்பேசவருவதில்லை என்று பேசுவதைப் பெருமையாகக் கொண்டிருந்த காலத்தில் ஆங்கிலம் பேசவேண்டிய அவசியம் நேர்ந்தாலன்றித் தமிழிலேயே பேசுவதை விரதமாகக் கொண்டிருந்தவர் இவரே. காங்கிரஸ் மாநாடுகளிலும் மற்றைய கூட்டங்களிலும் தமிழ் மொழிக்கு முதல் இடம் ஏற்படுத்திக் கொடுத்தவர் இவரே

பாமர மக்களுக்கும் புரியும் தமிழ் என்றால் கொச்சைத் தமிழ் என்று சிலர் குதர்க்கம் செய்கிறார்கள். கொச்சை மொழிகளை எழுத்து நடையில் கையாளுதல் அறவே ஆகாது என்கிறார் ராஜாஜி. நடைமுறையில் கலந்துபோய் எல்லோரும் ஒப்புக்கொண்டதும் தனி நோக்கத்துடன் சில சந்தர்ப்பங்களில் சேர்க்கக் கூடியதும் தவிர மற்றைக் கொச்சை மொழிகளைப் பேச்சிலும் கூடக் குறைத்துவரவேண்டும் என்பது அவர் கூறும் அறிவுரை உரையாடல் சீர்திருத்தத்தின் முதல் விதியாக அவர் அமைத்துச் சொல்வது: கொச்சையாகப் பேசுவதைக் கூடிய வரை விலக்கி மொழிகளைச் சரியாக உச்சரித்துப் பேசுதல்.

ராஜாஜி வழக்குரைஞர் தொழிலாற்றிக்கொண்டிருக்கும் போதே தமிழ் வளர்ச்சிக்காக ஆர்வமுடன் சேவை செய்தார். சில அறிஞர்களுடன் கலந்து தமிழ்க்

கலைச் சொற்களை நிர்ணயம் செய்ய முயன்றார். அன்பர்கள் சேர்ந்து நிறுவிய கலைச்சொல் ஆக்கக் குழுவிற்கு அக்காலத்தில் "தமிழ் சாஸ்திர பரிபாஷைச் சங்கம்" என்றுதான் பெயர் சூட்டிக்கொள்ள முடிந்தது. அச்சங்கத்தின் சார்பில் நடைபெற்ற சஞ்சிகையும் ஒரு சில திங்களே தவழ்ந்து மறைந்தது.

சொல்லை அடுக்கிப் பேசும் அதிர்ச்சிப் பேச்சாளர் அல்லர் ராஜாஜி கேட்போரை அடுத்து, அவர்கள் விரும்பி உணரப் பேசும் விருந்தூட்டுப் பேச்சாளர், அவர் வழா வழா என்று பேசி கால விளம்பனம் செய்யார். சுருக்கிப் பேசுவார். சுவாரஸ்யமாகப் பேசுவார். பொருந்திய உவமைகளை நிரந்து பேசுவார். வெட்டிக் கதைகள் என்று தட்டிக் கழிக்க முடியாத குட்டிக் கதைகள் பேசுவார். உயர்தரமான நகைச்சுவை சொட்டச் சொட்டப் பேசுவார்.

அரசியல் சிறைவாசத்தின் போதும் அரசாங்க அந்தஸ்தில் சிறையிருந்தபோதும் ராஜாஜி எழுதியவை கண்ணன் காட்டிய வழி, உபநிஷதப் பலகணி, அபேத வாதம், தாவரங்களின் இல்லறம், சிசுபாலனம் என்ற நூல்களாக வெளிவந்துள்ளன. தற்போது அவரது நூல்கள் ராஜாஜி மலர்கள் என்ற கோவையாக, கதைகள் கட்டுரைகள் அறநூல்கள் என்று தொகை செய்யப் பெற்றுத் தோன்றியுள்ளன. தற்காலத் தமிழ் இலக்கியப் பூங்காவில் ராஜாஜி மலர்கள் நிலைத்த இடம் பெற்று நறுமணங் கமழ்கின்றன.

தீண்டாமை விலக்கு, மதுவின் கேடு, மதசாதனை மாண்பு இவைபோன்ற விஷயங்களை வாசகர் உள்ளத்தில் அழுத்தவே அவர் சிறு கதைகளைக் கையாண்டிருக்

கிறார். நிரந்தரமான இலக்கிய சிருஷ்டியாக அவர் கதைகள் புனையக் கருதியதாகத் தெரியவில்லை. வட மொழியில் கண்ணன் காட்டிய வழியைத் தென்மொழி யில் திண்ணமாகக் காட்டுகின்றார் வியாசர் விருந்தில் அவர் தம் வியாக்யானப் புலமை விகசிக்கின்றது. சிசு பாலனத்தில் மக்களைப் பெற்ற மாதா பிதாக்களுக்குரிய ஆழ்ந்த மனோதர்மத்தைத் தெளிவுறுத்துகின்றார் குழந் தைகள் வளர்ப்பை நயத்துடன் மட்டுமல்ல பயத்துட னும் வினயத்துடனும் குழைந்து கூறுகின்றார். காத லும் கலியாணமும் பற்றி அவர் நிதானமாகப் பேசுகின் றார். அதைக் காதுகொடுத்துக் கேட்டால் அதில் முதிர்ந்த அநுபவ ஞானியின் உபதேசம் தொனிக்கும்.

"காதல் என்பது ஒரு ஜுரமாகவும் விவாகம் என் பது அதற்கு ஒரு மருந்தாகவும் எண்ணக்கூடாது.

காதல் மணமாயினும் சரி, சம்பிரதாய மணமாயி னும் சரி. யுத்தம் பின்னால்தான். அதில் வென்றாலொழிய வெற்றியில்லை, சுகமுமில்லை.

மணம் செய்தபின்தான் குருக்ஷேத்திரம். வாழ்க்கை முழுதும் ஒரு யுத்தகளம். மனத்தூய்மைக் குப் பல சோதனைகள் நேரிடும். தெருவிலும் வண்டியி லும் பலர் கூடி விருந்துகொள்ளும்போதும் காதலுக் குத் தக்க உயர்ந்த பாத்திரங்கள் போலும் முகங்களும் குணங்களும் பல தோன்றும். கொண்ட மனைவியைத் தாழ்த்தும் பல எண்ணங்களும் தோன்றும். அவை களைக் கவசம் பூண்டு எதிர்த்து வெல்ல வேண்டும்"

இலக்கியத் துறையில் ராஜாஜியின் மேதைக்குப் பொருந்திய பெருஞ்செயல் அவர் திருக்குறளை ஆங்கிலத்

தில் மொழி பெயர்த்து வழங்கியதே. திறமான புலமை எனில் வெளி நாட்டார் அதை வணக்கம் செய்யவேண்டும் மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை வங்க கவர்னர் ஆகவும், இந்திய கவர்னர் ஜெனரல் ஆகவும், யூனியன் அமைச்சராகவும் அவர் நிகழ்த்திய பேருரைகளில் வள்ளுவர், பாரதியார் ஆகியவரின் பெருமையை வையகம் உணர எடுத்துரைத்திருக்கின்றார். நம் புலவர் பெரு மக்களின் புகழை வெளி நாடுகளில் பரப்பும் சேவையில் ராஜாஜியின் பங்குபணி இலக்கிய வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படும் தன்மையது

# தகைசான்ற தமிழ்த்தூதர்

## அறிஞர் தனிநாயக அடிகள்



"யான் ஒரு சொற்பொழிவாளனோ அன்றி ஒரு எழுத்தாளனோ அல்லன். ஆராய்ச்சியில் ஈடுபடும் ஆர்வ

மிக்க தமிழ் மாணுக்கனே ஆவன். எனவே தமிழ் அறி விற் சிறந்த பெரியோர் பலர் கூடிய இப்பே ரவையில் உரை நிகழ்த்துவதற்கு அதுவும் சங்க இலக்கியத்தின் சிறப்பியல்புகள் பற்றி உரை நிகழ்த்துவதற்கு அஞ்சு கிறேன்'' யாழ்ப்பாணத் தமிழ்த் திருநாளில் அறிஞர் தனிநாயக அடிகள் இவ்வளவு அடக்கமான அவை அடக்கம் சொன்ஞர்கள். இது அவையடக்கந்தான், அவையடக்கமே யன்றி வேறல்ல என்பதை அவர்தம் பேருரை வெகு விரைவில் புலப்படுத்தியது.

தனிநாயகம் ஈழநாடு ஈன்ற எழிலார் கலைமணி. கண்டி நகரிலும் உரோமை மாநகரிலும் குருத்துவத் திற்குரிய கல்வி பயின்று வேதநூற் புலமை எய்திய தேசிகர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி நிகழ்த்தியவர். அதன் காரணமாக இலக்கிய வித்தகப் பட்டம் பெற்றவர். என்றும் இளையாத மாணவ ஆர்வம் நிரம்பிய பெரிய படிப்பாளி. தகைசான்ற தமிழ்த் தூதர்.

நம் இலக்கியத்தின் தொன்மை வாய்ந்த நூல் மரபாகத் தலைவி தலைவனுக்குத் தூதுவிடுப்பது அமைந் திருக்கின்றது. "ஓதல் பகையே தூது இவை பிரிவே" என்று தொல்காப்பியத்துள் தூதில் பிரிவு பிரிவுகளில் ஒன்ருகப் பேசப்படும் பிற்காலப் பதினெண்வகைச் சிறு நூல்களில் தூது நூலும் ஒன்ருகும். அகத்துறை யில் மயிலையும் குயிலையும் அன்னத்தையும் கிளியையும் வண்டினையும் தென்றலையும் தூதாக அனுப்புவது வார்க்கு ஏற்றதே.

தமிழ் அன்னை விடுக்கும் தூது பிணங்கிய தலைவனை நோக்கி அனுப்பப்படும் தூதல்ல. உலக மக்களுக்கு நம் கன்னி மொழியாள் அனுப்பும் உன்னத தூதன்றோ அது!

அன்பர் பணி செய்ய நம்மை ஆளாக்கி வைத்து விடும் இன்ப நலஞ் செறிந்த இனிய பெருந்தூதன்றோ அது? வாதுற்றும் பேதுற்றும் உருக்குலைந்து நிற்கும் மன்பதையை ஒரு குடும்பமாகக் கூட்டும் ஒற்றுமைத் தூதன்றோ அது? எம தன்னை, அறிவு தழைக்கத் தழைக்க தமிழ் அன்னை, தூதனுப்புகின்றாள் என்றாள் அவள் அஃறிணையிர்களையா தூதனுப்புவள்? தக்க சான்றோரை அன்றோ தூதனுப்புவள். அச் சான்றோர் குழுவில் இந்நாளில் நடுநாயகமாக விளங்குபவர் தனி நாயக அடிகள்.

அடிகள் 1949-50ல் உலகஞ் சுற்றினர். கீழ்த்திசை நாடுகளிலும் மேல் திசை நாடுகளிலும் தமிழ் மொழியைப் பற்றியும் திராவிடக் கலையைப் பற்றியும் சொற்பொழிவுகள் ஆற்றினர். ஐக்கிய அமெரிக்காவில் ஓராண்டில் தமிழைப்பற்றி இருநூறு விரிவுரைகள் நிகழ்த்தி யிருக்கின்றனர். நியூயார்க்கில் இருக்கும் மொழிப் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில் (Berlitz School of languages) அடிகளை ஆசிரியராக அமர்ந்து பணியாற்ற விழைந்து கேட்டனர். பலவூர்களிலும் விரிவுரையாற்றும் கடமை மேற்கொண்டிருந்தார்களாதலின் இப்பொறுப்பையும் ஏற்க அடிகள் இசைந்திலர். ஒரு முறை நியூயார்க் மேரினல் குருமடத்தில் சொற்பொழிவாற்றிய ஐந்து சர்வதேச பேச்சாளர்களில் அடிகளும் ஒருவர்.

தமிழ்த் தூதாகிய சீரிய சேவையின் தேவையையும் இன்றியமையாமையையும் பற்றி அடிகள் கூறுகின்றார். "இத்தொண்டு இக்காலத்து இன்றியமையாது வேண்டுமோவெனில் இன்றியமையாதுவேண்டும் உலக மொழிகளின் பிறப்பைக் கண்டும், அவை சிதையவும் மாறவும் வழக்கொழியவும், தான் இன்றும் தன் இளங் கன்னித் தன்மையைக் காத்துவருகின்ற தமிழ் அன்னைக்கு இன்று இடுக்கணும் இடும்பையும் நேர்ந்துள. தமிழ் அன்னை மீது பல்வேறு பகைவர்கள் அறிந்தும் அறியாதும் படை எடுத்துள்ளனர். இப்பகை எல்லாவற்றையும் புறங்காணும் கருவி தமிழ்த்தூது முரசின் ஒலி ஒன்றே என நம்புகிறேன்."

மேனாட்டு மொழியாராய்ச்சியாளரும் இலக்கிய ஆராய்ச்சியாளரும் இந்தியப் பண்பினை அறிதற்கு வடமொழி இலக்கியப் பயிற்சியே சாலும் எனக் கூறுவது பொருந்தாக்கூற்று என்பது அடிகளாரின் கருத்து.

தமிழ்க் கலையின் தனித்தன்மையை மேனாட்டார் உணராதது ஒரு பெருங்குறை என அடிகள் அறைகூவுகின்றனர். இந்திய நாட்டில் இந்தியக் கலைஞரால் எழுதப்பெற்ற இலக்கிய வரலாற்று நூல்களிலே தமிழுக்குத் தகுந்த இடமும் புகழும் அளிக்கப்படவில்லை என்று அவர்கள் குறைகூறுவதில் முறையுண்டு.

வெறுங்குறை சொல்லிவாளாவிருக்கவில்லை. ஆக்க வழிகள் சில வகுத்துக் காட்டுகின்றார். கழக ரீதியாகச் செயலாற்ற முனைகின்றார். அவர்கள் கூறும் சில "வேண்டும்" கள்.

1. ஹோமரின் ஒடிசியையும், வெர்ஜிலின் இனியதையும் மக்கள் போற்றுவதுபோல் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தையும் உலகம் போற்றுமாறு செய்யவேண்டும்.

2. கொன்பூசியஸ், செனக்கா முதலாய நீதிநூல் ஆசிரியர்களை உலக மாந்தர் எங்ஙனம் அறிந்து படிக்கின்றனரோ அங்ஙனமே திருவள்ளுவரையும் அவர்கள் அறிந்து படிக்குமாறு நாம் செய்வித்தல் வேண்டும்.

3. சாபோ, எலிசபெத் பிரௌனிங், ஷேக்ஸ்பியர் முதலானோரின் காதற்பாக்களை மக்கள் காதலித்துப் படித்து இன்புறுவதே போல் நம் அகத்துறை இலக்கிய நூல்களையும் படித்து இன்புறும் புதிய நாள் உதிக்க வேண்டும்.

4. உலக இலக்கியத் திரட்டு (World Classics) என்னும் பெருந்தொகை நூல்களில் நம் இலக்கிய நூல்களும் இடம் பெறும் பெருமை அடைவித்தல் வேண்டும்.

5. ஆங்கிலத்தில் B. B. C. இன் ஒலிப்புப் பொது நிலை விதியாயிருத்தல் போல தமிழிற்கும் யாதானுமொரு பொதுநிலை ஒலிப்பு வேண்டும்.

6. மேற்றிசைக் கண்ணும் கீழ்த்திசைக்கண்ணும் உள்ள பல பல்கலைக் கழகங்கள் தமிழ்க் கலைகளின் தனித்தன்மையை உலகிற்கு உணர்த்துமாறு செய்வித்தல் வேண்டும்.

தமிழ்க் கலையைத் தரணி எங்கும் பரப்பவேண்டும் என்று ஆழ்ந்த கலை ஞானத்தால் கிதித்தெழும் துடிதுடிப்பும் அத்துடிதுடிப்பிற்கேற்ற தொண்டுள்ளமும், அவ்வுள்ளத்திற்கேற்ற பொதுப்பணியும், அப்பணிக்

கேற்ற இயல்புகளும் சாதனங்களும் உடையவர் தனி நாயக அடிகள். இயற்கை மதி நுட்பம், எழில் தோற்றம், ஆராய்ந்த கலையறிவு இம்மூன்றும் தூது வனுக்குரிய இலக்கணமாகத் திருவள்ளுவர் குறித்தார். அத்திருவள்ளுவர் தனிநாயகம் அடிகளாரை நேரில் கண்டவரைப்போலன்றோ சொல்லி வைத்திருக்கிறார்?



## எண்பதாண்டு இளைஞர்
### வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார்

முப்பதில் முறுகல், நாற்பதில் நடுக்கம், ஐம்பதில் அசைவு, அறுபதில் ஆட்டம், எழுபதில் ஏக்கம், எண்ப தில் தூக்கம் என்று சொல்லுகிறார்கள். அநேகமாக அறுபது வயதிற்குமேல் உற்சாக உழைப்பிற்கு இடமிருப்பதாகத் தெரியவில்லை. பொதுவாக, எண்பதை அடுத்துத் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறும் காட்சியைத்தான் காண முடியும்.



இலக்கியத் தொண்டர்கள் இந்நியதிக்கு விலக்கானவர்கள் போலும். தமிழ் அறிஞர் சுப்பிரமணிய முதலியார் எண்

பதிலும் இணையற்ற இளமை யுணர்ச்சியுடன் தமிழ்ப் பணி செய்தனர். "வருஷங்களை ஒன்று இரண்டு என் றெண்ணி வயதைக் கணக்கிட்டு மனிதரைக் கிழவ ரென்றும் குமரர் என்றும் மதிப்பது சரியான முறை யன்று. எண்பது வயதான இளைஞரும் உண்டு. இரு பது வயதான கிழவரும் உண்டு. வெள்ளகால் திருவா ளர். ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர் களை நெருங்கிப் பழகினவர் ஒருவரேனும் அவர்களை ஒரு கிழவர் எனக் கூறத் துணியார். அவர்களது சுறு சுறுப்பைக் கண்ட எந்த இளைஞனும் அவர்கள் முன் நாணித் தலைகுனிந்து விடுவான்" என்று கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் கவனித்துக் கூறியதுண்டு.

"தமிழை அறிவதிலும் எழுதுவதிலும் எவர்க்கும் நான் பின் போவதில்லை" என்று அவர் சென்னைக் கிறிஸ் தவக் கல்லூரி மாணவராக இருக்கும்போதே தீர்மா னஞ் செய்துகொண்டார். இப்படிப்பட்டதொரு தீர்மா னத்தைச் செய்து அதனைக் கடைப் பிடிப்பதிலும் உறுதி காட்டிய ஒரு பெரியார் 80 ஆண்டிலும் ஒரு இளைஞ ராய் தமிழ்ச் சேவையில் இளையாராய் இருந்ததில் வியப் பில்லை.

முதலியார் முதன்மையான மொழி பெயர்ப்பாளர். நல்ல வசன கர்த்தா. இனிய பாவாணர். அரிய உரையா சிரியர்.

கால் நடை மருத்துவ இலாகாவில் முதலியார் உத் தியோகம் ஏற்றிருந்தனர். அம்மருத்துவ இலாகா சம்பந் தமான நூல்களை ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்த் தார். ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் எழுதிய கல்வி விளக்கத் தின் முதல் பாகத்திற்குத் தமிழ் ஆக்கம் தந்தார். ஆங்கி

லப் பெரும் புலவர் மில்டன் எழுதிய Paradise Lost என்ற பெருங்காவியத்தின் முதற் புத்தகம் சுவர்க்க நீக்கம் என்ற பெயரோடு விருத்தப்பாவில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இவரது கோம்பி விருத்தம் மெரிக் என்ற ஆங்கிலப் புலவரின் The Chameleon என்ற ஒரு பாட்டை ஆதாரமாகக் கொண்டு இயற்றப்பெற்றது.

இவரியற்றிய அகலிகை வெண்பா புலவர்களால் பெரிதும் பாராட்டப் படுவதொன்று இக்கவிதை நூலின் நடை முத்தொள்ளாயிரம் நளவெண்பா முதலியவற்றின் நடையை நிகர்த்து விளங்குகின்றது இது சிறிதும் சிரமமின்றி அனுபவிக்கக்கூடிய பாக்களைக் கொண்டிருக்கின்றது. மிகுந்த சிரமப்பட்ட பின்னரே சுவையறியத்தக்க முறையில் இவரது நெல்லைச் சிலேடை வெண்பா செய்யுட்கள் அமைந்துள்ளன. சருவசன செபம் என்ற பெயரில் 137 அடிகளால் நிரம்பிய இந் நூல், இவரியற்ற நூல்களில் உருவத்தால் சிறியது, உரைக்கப் பெறும் பொருளால் பெரியது. உள்ளத்தில் அவ்வப்போது எழுகின்ற உணர்ச்சிப் பெருக்கைப் பண்ணழகுடன் பாடி மகிழ்ந்தார் முதலியார். இப்பாக்கள் தனிக்கவித் திரட்டு என்ற நூலில் இடம் பெறுகின்றன.

எல்லாமும் வல்லவை என்ற பொருள்கள்
இரண்டே அவைகள் எவைகளெனில்
பல்லாயிரம் அண்டமெல்லாம் படைத்த
பரம் பொருள் ஒன்று; பணம் ஒன்றே.

என்று பணத்தின் மகத்துவத்தை நயமாகப் பாடுகின்றார். ஏறக்குறைய 350 தனிநிலைச் செய்யுள் அமைந்த இக்கவிதை நூலில் ஆசிரியன் ஆங்கில மொழித் தேர்ச

சியும் தமிழ் மொழிப் புலமையும் ஒருங்கியைந்து பாலொடு தேன் கலந்ததுபோல சுவை இன்பஞ் சுரக்கின்றது.

கற்போர் இதயம் களிக்கப் பாடியவர் கம்பர் என்பது மெய்தான். ஆனால் அவரியற்ற பன்னீராயிரம் செய்யுளையும் படித்து அநுபவிப்பது என்பது எல்லார்க்கும் இயைவதில்லை. யாவரும் படித்து அநுபவிக்கவேண்டும் என்ற உயர் நோக்கங்கொண்டு அந்நூலில் உள்ள சாரமான பாட்டுகளையெல்லாம் தேர்ந்தெடுத்து அப்பாக்களில் அமைந்த நயங்களை எடுத்துக்காட்டி கதைத் தொடர்பு அறுதவழி குறிப்பெழுதி கம்பராமாயண சாரம் என்ற நூலாக முதலியாரவர்கள் பிரசுரித்திருக்கிறார்கள். இது முதலியாரவர்களின் தமிழ்ச் சேவைகளில் தலையாயது என்போம்.

# பேச்சுக்கலை வீரர்

## கி. ஆ. பெ. விசுவநாதம்



திருச்சிராப்பள்ளி கி. ஆ. பெ. விசுவநாதம் தற்காலத் தமிழ் உலகில் நன்கு அறியப்பெற்ற சொற்பொழிவாளருள் முன்னணியில் விளங்குபவர். பேச்சினைக் கலையாகப் பேணி கருத்துடன் பயின்று முறைமை சிறந்து உலையாத ஆர்வத்துடன் ஊழியஞ் செய்யும் கர்ம வீரர்.

கவர்ச்சிகரமான முருகுப் பொலிவும் கணீர் கணீர் என்று ஒலிக்கும் குரல் எடுப்பும் இவருக்கு இயற்கை அன்னை அளித்த எழிற்கொடைகள்.

இவருக்குக் கல்வியூட்டி இவரைச் சிந்தனையாளராகச் செப்பம் செய்த பெருமை எந்தப் பள்ளிக்கூடத்திற்கும் இல்லை. கல்லூரிக்கும் இல்லை. எந்தத் தனிப் பட்ட ஆசானுக்கும் இல்லை.

ஏகலைவனுக்கு விற்கலை கற்பிக்க துரோணாச்சாரியார் மறுத்துவிட்டாராம். அவன் அவரைப்போல் ஒரு உருவம் செய்வித்து அதனிடத்து அன்பு வைத்து வழிபட்டு வில்வித்தையில் தேர்ச்சி பெற்றானும் துரோணரே தன் குருவென்று சொல்லி, காணிக்கை வேண்டுமென்ற விடத்துத் தன் வலது கைப் பெருவிரலை அறுத்துக் கொடுத்தானும். இது புராணக் கதை.

வில் வன்மைபெற்ற ஏகலைவனைப்போலவே ஒரு வகையில் இவரும் சொல்வன்மை பெற்றவர் என்னலாம் ஆனல் இவர் விஷயத்தில் கற்றுக்கொடுக்க மறுத்த துரோணரைக் காணும் கடுமையான காணிக்கைக்கும் இவர்தம் பயிற்சியில் இடம் இருந்ததில்லை. "எந்த ஆசிரியருக்கும் இரண்டணைக் காசுகூடக் கொடுக்காமல் தாமே படித்து முப்பது ஆண்டுகளாகத் தமிழ்ப் பேச்சை நடத்திவரும் இன்றைய கூலவாணிகன் சாத்தனர்" என்று அறிந்தோரால் பாராட்டப்பெறும் அளவிற்குப் புகழ்படைத்திருக்கின்றார்.

பரீட்சையை எதிர் நோக்கிப் படித்தவண்ணமாய் இருந்து அது தீர்ந்ததும் படிப்பை மறந்து திரியும் மாணவர் உண்டு. "கற்றாரை யாம் வேண்டோம்; கற்பனவும்

இனி அமையும்'' என்று கூறுவார்போல தம் கல்லூரிப் புத்தகங்களை மூட்டை கட்டிப் பழைய புத்தகக் கடையில் விலைக்கிரயஞ் செய்யும் கலை வினைஞரும் உண்டு. விசுவநாதம் பரீட்சையை எதிர்நோக்கிப் படித்தவரல்லர். படிப்பை மறவாது படித்துக்கொண்டிருப்பவர். கற்றோர் கூட்டுறவைக் கருதிப் போற்றுபவர். கற்பனவற்றை நாடிச் சிந்தனையில் ஆழ்பவர். கலைமணம் கமழும் அவர்தம் ''மணிவாசக மன்றத்''தில் இருக்கின்ற, நன்கு பயன் படுத்தப்படுகின்ற, சுவடிகளைப்போல எந்தக் கல்லூரிப் பட்டதாரியின் இல்லத்திலும் நாம் காண்பது அரிது.

''இருவேறு உலகத்தியற்கை திருவேறு தெள்ளியராதலும் வேறு'' என்ற வள்ளுவர் விதிக்கு விலக்கானவர் விசுவநாதம். பூவின் கிழத்தியும் நாவின் கிழத்தியும் ஓரிடத்தில் பொருந்தியிரார் என்ற புராதன வாக்கு இவரைப் பொறுத்தமட்டில் பலிதமாகவில்லை. இருநோக்கு இவருக்கு உண்டு வணிகத்தில் ஒருநோக்கு. தமிழ்ப் பணியில் இன்னொரு நோக்கு. இந்நிலையில் நமது நாட்டிற்கு நல்ல தொண்டாற்றி வருபவர் விசுவநாதம்.

இவருக்கு நன்றாகப் பேசத்தெரிகின்றதற்குரிய காரணங்கள் பலவற்றுள் பேசாமல் இருக்கவும் தெரியும் என்பது ஒன்றாம். பேச்சுக்காகப் பேசிக்கொண்டேயிருக்கின்ற வாய்ப்பந்தற்காரர் அல்லர் இவர். எப்பொருளைப்பற்றியும் பேசுமுன் சிந்தித்துக் குறிப்பெழுதிக்கொள்கிறார். ஒரு துண்டுத்தாளில் எடுத்துக் கொண்ட குறிப்போடுதான் கூட்டத்திற்கு வருகிறார். நிரல்படக் கோவையாகப் பேசுகின்றார். நகைச்சுவையும் உணர்ச்சிப் பெருக்கமும் இவர் பேச்சின தனி அம்

சங்கள். கேட்டாரைப் பிணிக்கும்படி பேசுகின்றார். அவையோரைச் சிந்திக்கச் செய்கிறார். செயலில் ஈடுபடுத்துகிறார். குறித்த காலத்தில் பேசி முடிக்கிறார்.

பேசுவதாக ஒப்புக்கொண்டால் தவறாமல் உரிய காலத்தில் வருவார். கல் வீச்சிடையேயும் கலங்காமல் பேசுவார். திருநெல்வேலியிலும், எட்டயபுரத்திலும், ராஜபாளையத்திலும் இவர் கல்லடிகளை வாங்கிக்கொண்டும் இரத்தத்தை துடைத்துக்கொண்டும் பேச்சுப் பணியாற்றியிருக்கிறார்.

பேச்சாளர் ஆக விரும்புவோர் பண்பட்ட இப்பேச்சாளர் சொற்பொழிவைப்பற்றிக் கூறுகின்ற அநுபவ வார்த்தைகளைக் கேட்டுப் பயன் பெறலாம். இவர் கூறுகின்றார் :

“நல்ல சொற்பொழிவுக்குக் கருத்துக்கள் மிகவும் தேவை. கருத்து நிறைந்த பேச்சு நெல் போன்றது. கருத்து இல்லாத பேச்சு பதர் போன்றது.

முக்கால் மணிநேரப் பேச்சுக்கு எடுக்கும் குறிப்பு ஒரு அஞ்சல் அட்டையில் (Post Card) அரை அட்டை அளவிற்குள் தான் இருக்கவேண்டும்.

அவை அடக்கம் என்பது வேண்டாத ஒன்று. அது வீணாகக் காலத்தைப் போக்கும். வணக்கம் என்பதே போதுமானது.

கேட்போரது உள்ளம் கொதிப்படையும்படியும் பேசலாம். கொட்டாவி விட்டுத் தூங்கும்படியும் பேசலாம்.

சிறந்த பேச்சாளர் தேவை. ஒழுக்கமுள்ள பேச்சாளர் தேவை. தன்னலமற்ற பேச்சாளர் தேவை.

அப்படிப்பட்ட பேச்சாளர்களில் நீயும் ஒருவனாக ஆகவேண்டுமென்று ஆசைப்படுகின்றாயா? அப்படியானால அதற்குரிய வழி இதுதான்.

படி! நன்றாகப்படி! பிறகு அறிஞர்களிடம் கேள். அடுத்து ஆராய்ச்சி செய் உண்மையை உணர். உணர்ச்சியைப் பெறு! ஒழுக்கமாய் நட! உடனே எழுத்தாளியாக மாறு! பிறகு பேச்சாளியாகக் கிளம்பு! அம்மட்டோடு நின்றுவிடாதே! ஆற்றல் மிகுந்த செயலாளியாகவும் தோன்று''

---

## அருவியில் மூழ்கிய எரிமலை

**வ. வே. சு. ஐயர்.**

1925-ம் ஆண்டு ஜூன் மாதம் 3-ம் தேதி காலை 10 மணி சேர்மாதேவி குருகுல மாணவர்கள் திருக் குற்றாலக் கவின் காட்சி கண்டு களிப்புற்றிருக்கும் வேளை. குருகுல அதிபர் வ. வே. சு ஐயர் அவர்கள் தம் மகள் சுபத்ராவுடன் அங்கிருந்தனர். கல்யாணி தீர்த்தத்தை யொட்டி மாணவர் நயாக ஆற்றைக் கடந்தனர். அவர்களைப் போலவே சுபத்ராவும் கடக்கத் துணிந்தாள். விளையாட்டு எண்



தில் வினை விளைந்தது. சறுக்கென வழுக்கி வீழ்ந்தாள் சிறுமி. ஆழமான நீர்ச் சுழியில் அகப்பட்டுத் திக்கு முக்காடினாள். அருமைப் புதல்வியைக் காக்கப் பாய்ந்த ஐயரும் அச்சுழியில் அகப்பட்டுக்கொண்டார். தாம்பிர பர்ணியின் தண்ணளிக்கு ஒவ்வாத பொல்லாப் பெரும் பசிக்கு இருவருமே இரையானார்கள்.

அரசியல் வாழ்க்கையில் ஐயர் ஒரு எரிமலை. லண்ட னின் பாரிஸ்டர் தேர்ச்சிபெற்று அலுவல் பார்க்கும் காலம் அடுத்தது ராஜ விசுவாசப் பிரமாணம் எடுக்க வேண்டுமே. அடிமைத் தளையை அறுத்தெறிய வேண் டும் என்று குமுறுகின்ற சுதந்திரவீரர். அத்தகைய பிரமாணம் எடுக்க இசைவாரோ? ஆங்கில அரசனைத் தம் நாட்டு அரசராக அங்கீகரிக்க மறுத்தார். அன்று தொடங்கி அவர் அந்நிய ஏகாதிபத்தியக் கண்ணுக்கு இலக்கான ஒரு அபாய அறிவிப்பு. ஒரு கட்டத்தில் அவர் இங்கிலாந்திலிருந்து மாறு வேடத்தில் தப்பிப் போக நேர்ந்தது. பாரிஸிலும் பாண்டிச்சேரியிலும் அக்ஞாத வாசம் செய்யவேண்டியதாயிற்று பெல்லாரி யில் சிறைவாசமும் செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது. விடுதலைப் போராட்டத்தில் ஐயரைச் சூழ்ந்த இன்னல் கள் எண்ணில. அவற்றைத் தாய் நாட்டுப் பணியில் தமக்குக் கிடைத்த பரிசுகளாகவே ஏற்று மகிழ்ந்தார். அதுமட்டுமா? தாய் மொழிச் சேவையிலும் நிரந்தரமான சில பரிசுகளை வையகத்திற்கே வழங்கி யிருக்கின்றார்.

எந்த நிமிஷமும் தாம் நாடு கடத்தப்படலாம் என்ற இடர்ப்பாடான சமயம். அச்சமயத்தில் திருக்குறள் ஆங் கில மொழிபெயர்ப்பைத் தொடங்கினார். அதனை ஓராண்டிற்குள் செய்து முடித்தார். அது வெகு தீவிர

மாகச் செய்து முடிக்கப்பெற்ற மொழிபெயர்ப்பு. எனினும் இதுகாறும் கிடைத்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்புகளில் ஐயரவர்களின் மொழிபெயர்ப்பே ஆகச் சிறந்தது என்பது அறிஞர்கள் கருத்து. 1921—22-ல் பெல்லாரியில் சிறைத் தவங் கிடந்தார். அப்போது கம்பனை அகில உலகிற்கும் அறிமுகப்படுத்தும் அரும் பணியில் ஈடுபட்டார். Kamba Ramayanam A Study என்ற நூலை எழுதினர். கம்பரது செய்யுட்களில் 4000 மேற்பட்ட செய்யுட்களை ஆங்கிலக் கவிதையிலும் கவிதை தோன்றும் வசன வாசகத்திலும் மொழி பெயர்த்திருக்கிறார். இந்நூல் டெல்லித் தமிழ்ச் சங்கத்தாரின் நன்முயற்சியால் சிறந்த முறையில் பதிப்பிக்கப் பெற்று வெளிவந்துள்ளது. குறுந்தொகையின் ஆங்கில மொழி பெயர்ப்பு அச்சேறுதிருந்தது. அது 1942 ஆகஸ்ட் குழப்பத்தோடு மறைந்து போனது வருந்துதற்குரியது.

எமர்சன் எழுதிய Self Reliance என்ற கட்டுரையை ஐயரவர்கள் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். தமிழ் இலக்கியத் திறன் ஆய்ந்து தெளிதலின் முன்னோடியாக விளங்குபவர் இவரே. Criticism என்ற துறைக்கு ரசனை என்ற சொல்லை ஆக்கிக்கொடுத்து அத்துறையில் கம்பராமாயண ரசனையைத் திறம்பெறச் செய்து வழிவகுத்த கலைஞானி இவரே. மங்கையர்க்கரசியின் காதல் முதலிய சிறு கதைகளையும் பிளேட்டோ, சாக்ரட்டீஸ் புக்கர், வாஷிங்டன் போன்ற மேதைகளின் வாழ்க்கை வரலாறுகளையும் எழுதியிருக்கிறார். நடை மணிப்பிரவாள நடைதான். ஆனால் கவிதைச் சுவையும் கற்பனை சுவையும் நிரம்பிய கம்பீரமான நடை.

ஐயரவர்களின் அதி முக்கியமான இலக்கிய சேவைகள் இரண்டினை இசைத்துக் காட்டும் முறையில் சுவாமி சுத்தானந்த பாரதியார்,

கண்ணனை வள்ளுவனைக்
கம்பக் கவியரசைப்
பண்ணேறும் ஆங்கிலத்தில்
பாருக் கருளியவன்

என்று பாடிப் பரவுகின்றார்.

மேலும் சுவாமிகள்,

சிங்கம் போல் வீறுடையான்
சேய்போல வஞ்சமிலான்
தங்கமணிக் குரலான்
சாவிற்கும் அஞ்சாதான்

என்று கூறும்போது ஐயரவர்களின் வீரத் திருத்தோற்றம் நம் மனக்கண் முன் வந்து நிற்கின்றதென்போம்.

தாய்நாடு வாழத்
தமிழர் குலச் சிறோங்க
ஓயாது பாடுபட்ட
உத்தமனை உண்டனையோ ?

என்று சுவாமிகள் கல்யாணி தீர்த்தத்தை நோக்கிக் கண்ணீர்வடித்துக் கேட்கிறார். ஐயரவர்களின் சேவைத் திறமுணர்ந்த அனைவரும் அப்படியேதான் கேட்பார்கள்.

# சேவை வழங்கிய செல்வர்

## கா. சுப்பிரமணிய பிள்ளை

சுப்பிரமணிய பிள்ளையவர்களை நேரில் அறிந்த எவரும் அவர்தம் பிள்ளை இயல்பைக் கவனியாது இருந்



திருக்க இயலாது. வஞ்சமில்லாத நெஞ்சம்; கள்ளமில்லாத உள்ளம். இதுவே அவர்தம் பேருடைமையாக விளங்கியது. வரலாறு, ஆராய்ச்சி, உரை ஆகிய இத் துறைகளில் பேராசிரியர் எழுதி எழுதிக் குவித்தார். எழுத்துக் குவியலைப் போலவே பணக்குவியலுங் காணச்

சந்தர்ப்பங்கள் இருந்தன. ஆனால் அவர் அவற்றைப் பொருட்படுத்தவே யில்லை. பணத்தைப் பற்றி அவர் கவலைப்படவேயில்லை.

பிள்ளையவர்களின் நெருங்கிய நண்பர்கள் அவரைக் காசுப்பிள்ளை என்று அழைப்பார்கள் நிறையக் காசிருந்த காரணத்தால் அல்ல. கா. சுப்பிரமணிய பிள்ளையின் சுருக்கமே காசுப்பிள்ளையாயிற்று. பேராசிரியரின் நூல்கள் தமிழ் மக்களிடை செல்லுங் காசாக வழங்கி வருகின்றன. அவர் அந்நூல்களால் பெற்ற காசுகள் வெகு சொற்பம். தொடர்ந்து காசுகள் பெறுதற்கான அமைப்புகளையும் செய்துகொண்டதாகத் தோன்றவில்லை.

பிள்ளையவர்களிடத்தில் பேராசிரியப் பதவியாலும் பிற பதவிகளாலும் அதிகாரம் இருந்தது. அவர் அதனை நிர்வகிப்பதிலும் இனிமையோடு கூடிய குறைந்த இயல்பைத்தான் காட்டினார். அதிகாரம் அவரைப் பொறுத்த மட்டில் என்றைக்குமே அதிக காரமான அளவிற்குப் போகவில்லை.

"கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தமிழ் பேசுவதும் நான் இங்கிலீஷ் பேசுவதும் ஒன்றுதான். இரண்டும் தமிழ் பேசும் தமிழர்களுக்குப் புரியாது" என்று பிரசித்திபெற்ற ஒரு தமிழ் எழுத்தாளர் பகிரங்கமாகக் கூறினார். இதைக் கேட்டும் பிள்ளையவர்கள் கோபங் கொள்ளவில்லை. மருட்சியும் அடையவில்லை. நிதானமாகவும் அமைதியாகவும் இலக்கியப் பணியைத் தொடர்ந்து செய்தார்.

அந்தப் பிரசித்திபெற்ற எழுத்தாளர் பேசிய இங்கிலீஷ் தமிழ்பேசும் தமிழர்க்குப் புரியாதிருந்திருக்கலாம்.

ஆனால் பிள்ளையவர்கள் பேசிய பிள்ளைத் தமிழ், வெள்ளைத் தமிழ் தமிழர்க்குப் புரியவில்லை என்றது வெறும் அபவாதம். மறைமலை அடிகளைப் பின்பற்றிய வழியில் பிள்ளையவர்கள் தனித்தமிழ் எழுதும் இயல்புடையார். இப்போக்கு அந்தப் பிரசித்திபெற்ற எழுத்தாளர்க்குப் பிடிக்கவில்லை உடனே ஒரு வெடிக்குண்டைப் போட்டார். அந்த வெடிக் குண்டாலும் பிள்ளையவர்களின் இலக்கிய சேவை சேதமடையவில்லை

பிள்ளையவர்கள் இயற்றிய தமிழ் இலக்கிய வரலாறு தமிழ் மாணவர்களால் பெரிதும் பயிலப்பட்டு வருகின்றது சைவசமயப் பெரியார்களைப் பற்றிய ஆராய்ச்சி நூல்களும் பெரிதும் போற்றப் பெற்றும் பயிலப்பெற்றும் வருகின்றன. ஐம்பதுக்கு மேற்பட்ட அரிய நூல்களை ஆக்கித் தந்து தற்காலத் தமிழ் இலக்கியத்திற்கு வள மூட்டிய பெருமை பிள்ளையவர்களைச் சாரும். இக் காரணம் பற்றியே பிள்ளையவர்களைச் சேவை வழங்கிய செல்வராகத் தமிழர்கள் பாராட்டுவர்.



Printed at Sri Bharathi Press, Choolai, Madras-7.